காரத்தைத்தான் இறைவனது திருச்செவி குறிக்கிறது என்பர். ஞானசம்பந்தர் "தோடுடைய செவியன்" என்று திருச்செவியை முதன் முதலில் எடுத்தோதியதும் ஓங் காரத்தையே என்று கூறுவர்.

**13.** துடி : சிவபெருமான் தமது வலது கையொன் றில் துடி (உடுக்கை) ஏந்தியுள்ளார். துடி, ஐஞ்செயல் களில் முதலாவதாகிய படைக்கும் செயலைக் காட்டுகிறது. "தோற்றம் துடியதனில்" என்பது திருமந்திரம்.

**14.** தீச்சுடர். இடது கை யொன்றில் தீச்சுடரை ஏந்தியிருக்கிறார். இது, ஐஞ்செயல்களில் ஒன்றான அழிக் கும் செயலைக் குறிக்கிறது. "அரன் அங்கிதன்னில் அறையில் சங்காரம்" என்பது திருமந்திரம். "சங்காரச் சத்தியான தீச்சுடரானது மகா மாயையின் மேலிருக்கிற பொருள்களை வெளிப்படுத்துகிறதாயும் பாசங்களை எரித்து நீறாக்குகிறதாயும் இருக்கிறது" என்பது காமிகா கமம்.1

எனவே, ஆன்மாக்களில் படிந்திருக்கிற பாசங்களை நீக்குகிற சங்காரவடிவமானது தீச்சுடர் என்னும் தத்துவப் பொருள் அறியத் தக்கது.

**15.** சூலம் : மற்றொரு கையில் சூலம் ஏந்தியிருக் கிறார். சூலம் மூன்று பிரிவையுடையது. "மூன்று பிரிவையுடைய சூலம் மூன்று குணத்தைக் குறிக்கிறது" என்று காமிகாகமம் கூறுகிறது.2

"ஆரணி, செனனி, இரோதயித்திரி என்று மூன்று சக்தி வடிவினதாகிய மூன்று கவர்களையுடைய சூலப்படையானது அவர் முத்தொழிலுடைய ரென்பதை யும் மும்மலங்களை நீக்குபவர் என்பதையும் குறிக்கிறது"

1 அர்ச்சனுவிதி படலம் 336.

2 அர்ச்சனுவிதி படலம் 335.

என்னும் வேறு கருத்தைப் பௌஷ்கராகமம் கூறுகிறது. (ஆரணியானது அழித்தல்செயலையுடையதாய் உயிர்களைத் தத்துவத்தினின்றும் தத்துவாந்தத்தை அடைவிப்பது. செனனியானது ஆக்கல் தொழிலுக்குக் காரணமாயிருப்பது. இரோதயித்திரியானது உயிர்களைப் போகங்களில் நிறுத்துவது.) எனவே, திரிசூலம் ஆக்கல், காத்தல், அழித்தல் என்னும் சக்திகளைக் குறிக்கிறது. "மூவிலை யொரு தாட் சூலம் ஏந்துதல், மூவரும் யானென மொழிந்த வாறே" என்பது பதினொராந் திருமுறை, ஒருபா ஒருபது. பிரமா விஷ்ணு சிவன் என்றும் மூவரும் தாமே என்பது பொருள்.

**16.** பாசம்: ஒரு கையில் பாசக் கயிற்றைக் கொண்டிருக்கிறார். பாசக்கயிறு ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களைக் குறிக்கிறது என்று காமிகாகமம் கூறுகிறது.1

ஆன்மாக்களுக்கு மலத்தை யூட்டுவிப்பவர் தாம் என்பதை அறிவிக்கும் காரணமாக மாயா ரூபமாகிய பாசக்கயிற்றை ஏந்தியுள்ளார் என்றும் கூறுவர். மும்மலங்களைக் குறிக்கிறபடியினாலே, பாசக்கயிற்றை முப்புரி (பாசத்திரயம்) என்றும் கூறுவர்.

17. கோடரி. (பரசு) இந்த ஆயுதம் கடவுளின் பேராற்றலைக் குறிக்கிறது.

**18.** வாள்: இதுவும் அவரது பேராற்றலைக் குறிக்கிறது என்று காமிகாகமம் கூறுகிறது. அவர் ஏந்தியுள்ள வச்சிராயுதமும் அவரது ஆற்றலைக் குறிக்கிறது என்று ஷை ஆகமம் கூறுகிறது.2

---

1 அர்ச்சனாவிதி படலம் 337.

2 ,, ,, 335.

வாளே ஞானம் என்று கூறுவர் மணிவாசகர். "ஞான வாள் ஏந்தும் ஐயர்" என்பது திருவாசகம்.

**19.** அங்குசம்: ஒரு பொருளே அடைந்து, அதனே அனுபவிப்பதற்கு அறிகுறியாயிருப்பது அங்குசம் என்று காமிகாகமம் கூறுகிறது.

**20.** மழு: பரா சக்தியின் உருவம் என்பதையும் லயத்தானம் என்பதையும் தெரிவிப்பது மழு என்னும் ஆயுதம் என்பர். பராசக்திக்கு மேலானவரும் லயசிவமா யிருப்பவரும் தாம் என்பதை உணர்த்த இறைவன் மழு ஏந்தியுள்ளார் என்பர்.

**21.** மணி: ஓசையின் சொரூபமான மணி ஏந்தி யிருப்பது இறைவனின் மந்திர ரூபத்தைக் குறிக்கிறது என்று காமிகாகமம் கூறுகிறது.[1]

நாததத்துவத்திற்குத் தலைவர் தாம் என்பதை உணர்ந்துவதற்கு ஓசையின் உருவாகிய மணியை இறை வன் ஏந்தியுள்ளார் என்றும் கூறுவர்.

22. அபயகரம்: இறைவன் ஒரு கையை அபயம் காட்டியிருக்கிறார். இதை அமைத்த கை என்பர். இது காத்தல் தொழிலேக் குறிக்கிறது என்பர்.

"அமைத்தல் திதியாம்" என்பது திருமந்திரம்,
"தனித்தனி வகுத்த சராசரப் பகுதி
அனைத்தையும் காப்பதுன் அமைத்த பொற்கரமே"
என்றார் குமரகுருபர சுவாமிகள்.

"அபயகரமானது உலகங்களேக்காக்கிற சக்தியாகும்" என்பது காமிகாகமம்.

**23.** வீசிய கை: (கஜ ஹஸ்தம்) இது எப்போதும் தூக்கிய திருவடியைக் காட்டிக் கொண்டிருக்கிறது. தூக்

1 அர்ச்சனை விதிபடலம் 338.

கிய பாதம், உயிர் மலத்தினின்று விடுபட்ட நிலையைக் காட்டுகிறது. ஆகவே, அதனோடு பொருந்தியுள்ள வீசிய கரம் உயிர் பேரின் நிலையை யடைகிற செய்தியைக் குறிக்கிறது போலும்.

**24.** பாம்பு: தாண்டவப் பெருமான் கையில் பாம்பை ஏந்தியுள்ளார். உடம்பிலும், அரையிலும், கையிலும் பாம்பை அணிந்திருக்கிறார். "கம்பீர வடிவமான நாக சக்தியானது யாவற்றையும் நியமிப்பது" என்னும் கருத்தைக் காமிகாகமம் கூறுகிறது.[1]

திருநாவுக்கரசரும் இதனையே கூறுகிறார்:

**"போர்ப்பனை யானை யுரித்த பிரான், பொறியரவம்**
**சேர்ப்பது, வானத் திரைகடல் சூழுலகம் இதனைக்**
**காப்பது காரணமாகக் கொண்டான். கண்டியூரிருந்த**
**கூர்ப்படை யொள்வாள் மழுவனை யாமண்டர் கூறுவதே"**

என்று அவர் கூறியிருப்பது காண்க. எனவே, உலகம் தோன்றவும் ஒடுங்கவும் தான் நிமித்தகாரணன் என்பதை யுணர்த்த குண்டலினி சக்தி யுருவமாகிய பாம்பைச் சிவன் ஏந்தியுள்ளார் என்பது அறியத் தக்கது.

**25.** முயலகன்: தாண்டவப் பெருமானுடைய ஊன்றிய பாதத்தின் கீழே முயலகன் உருவம் காணப்படுகிறது. முயலகனைக் கரு என்றும், குறள் என்றும் அபஸ்மாரன் என்றும் கூறுவர். "கருவின் மிதித்த கமலப் பதம்" என்பது திருமந்திரம். "காருடல் பெற்ற தீவிழிக்குறள்" என்பது கல்லாடம். "மூடாய முயலகன்" என்றார் சுந்தரமூர்த்திகள். முயலகன் கருநிறமும், விகார உருவமும் உள்ளவன். முயலகன் உருவம் ஆன்மாவைப் பற்றிக் கிடக்கும் மலத்தைக் குறிக்கிறது. முயலகன் கையிலும் படங்கொண்ட பாம்பு ஒன்று இருக்கிறது. இப்பாம்பு ஆணவ மலத்தைக் குறிக்கிறது போலும்.

---

1 அர்ச்சனா விதிபடலம் 338.

**“படங்கொடு நின்ற இப்பல்லுயிர்க் கெல்லாம்**
**அடங்கலும் தானாய்நின் றாடுகின்றானே”**

என்பது திருமந்திரம். இதில், படங்கொடு நின்ற பல்லுயிர் என்பது, ஆணவ மலங்கொண்ட உயிர்கள் என்று பொருள் படும்.

**26.** திருவாசி: நடராசப் பெருமானைச் சூழ்ந்து திருவாசி யிருக்கிறது. இது ஓங்காரத்தைக் குறிக்கிற தென்பர்: “ஓங்காரமே நல் திருவாசி, உற்றதனில் நீங்கா எழுத்தே நிறை சுடராம்” என்பது உண்மை விளக்க[3].

**27.** மான்: மானைக்கையில் ஏந்தியது “வேதத்தின் நாயகர் தாம்” என்பதை உணர்த்தும்.

**“வேதமான் மறி ஏந்துதல் மற்றதன்**
**நாதன் தானென நவிற்றுமாறே”**

என்பது பதினொருந் திருமுறை.

3 ஒருபா ஒருபது

## தாண்டவச்சிற்ப உறுப்புகள்.




படம் 1.

## தாண்டவச் சிற்ப உறுப்பு விளக்கம்.

அடுத்தப் பக்கப் படத்திலே, தாண்டவப் பெருமானுடைய சிற்ப உருவத்தில் காணப்படுகிற முக்கியமான உறுப்புகளைத் தனித்தனியே காட்டியுள்ளோம். இனி காட்டப் போகிற தாண்டவ உருவங்களை ஆராய்வதற்கு முன்பு, இவ்வுறுப்புகளை ஊன்றிப்பார்த்து இவற்றின் அமைப்புகளையும், தத்துவக் கருத்துக்களையும் அறிந்து கொள்வது நலம். இவ்வுறுப்புகளின் தத்துவக் கருத்துகள் மேலே விளக்கப்பட்டன. ஆண்டுக் கண்டுகொள்க

**1.** முகமும் தலையும். முகத்தில் நெற்றிக்கண் இருப்பதைக் கவனிக்கவும். ஒரு காதில் மகரக் குழையும் மற்றொரு காதில் தோடும் உள்ளன. தலையில் நிலாப்பிறை, கங்கை, ஊமத்தமலர், கொக்கிறகு அல்லது மயிலிறகு முதலியவை உள்ளன. **2.** முயலகன். குறளுருவமுள்ள முயலகன் குப்புறப்படுத்திருக்கிறான். ஒரு கையில் பாம்பு இருக்கிறது. **3.** திருவடிகள். 3a. தூக்கிய திருவடி (குஞ்சித பாதம்). 3b. ஊன்றிய திருவடி. **4.** மணி ஏந்தியகை. **5.** அனல் ஏந்தியகை (பிறைக்கை என்பர்). **6.** அபய கரம். (பதாகைக் கை). **7.** கபாலம் ஏந்தியகை. **8.** மழு ஏந்தியகை **9.** வியப்புக்குறி (விஸ்மயம்) **10.** வீசியகரம் (கஜஹஸ்தம்). **11.** பாம்பு ஏந்தியகை. **12.** பாசம் ஏந்தியகை. **13.** சூலம் ஏந்தியகை. **14.** அங்குசம் ஏந்தியகை. **15.** துடி ஏந்தியகை.

பொது இயல் முற்றிற்று.

# எழுவகைத் தாண்டவம்

## சிறப்பியல்.

### தாண்டவ வரலாறு.

"தேன்புக்க தண்பணை சூழ் தில்லைச் சிற்றம்பலவன்
தான்புக்கு நட்டம் பயிலுமது என்னேடீ"

சிவபெருமான் செய்தருளும் தாண்டவங்கள் நூற்றெட்டு என்பர். சிலப்பதிகாரம், கலித்தொகை முதலிய சங்ககாலத்து நூல்களிலே கொடுகொட்டி, பாண்டரங்கம், காபாலம் என்னும் தாண்டவங்கள் மட்டும் கூறப்படுகின்றன. திவாகரம், சூடாமணி என்னும் நிகண்டுகளும் இம் மூன்று தாண்டவங்களையே குறிப்பிடுகின்றன.

மூன்று தாண்டவங்கள் நூற்றெட்டாக ஆனது, பிற்காலத்திலே தாண்டவக்கலை வளர்ச்சியடைந்ததைக் காட்டுகிறது.

நூற்றெட்டுத் தாண்டவங்களையும் நாம் இங்கு ஆராயப்புகவில்லை. நாம் ஆராயப்புகுவது, ஐஞ்செயலைப்பற்றிய தாண்டவங்களை மட்டுமே. சிவபெருமான் ஐயஞ்செயலைச் செய்கிறார். ஐயஞ்செயலுக்கும் ஐந்து தாண்டவங்கள் இருக்கவேண்டியது முறையாகும். ஆனால் ஐயஞ்செயலைக் காட்டும் தாண்டவங்கள் ஏழு என்று நூல்கள் கூறுகின்றன. இதனை ஆராய்வோம்.

கௌரியம்மையார் சிவபெருமானை நோக்கி, "தாண்டவ வகை எத்தனை? அவை யாவை? அவற்றின் வரலாறு என்ன? விளங்கக் கூறவேண்டும்." என்று வேண்டிக் கொள்ள, பெருமான் அம்மையாருக்கு இவற்றை விளக்க

மாகக் கூறுகிறார் : இசை நூல்களில் கூறப்படும் ச, ரி, க, ம, ப, த, நி என்னும் ஏழு வகையான இசைகளினின் றும் ஏழு வகையான தாண்டவங்கள் தோன்றின.

" ஒன்றின்பின் என்றாய் ஒலித்தெழுந்தனவால்
ஓதும் அவ்வேழ் சுரங்களினால்
நன்று நம்மிடையே எழுவித நடனம்
நலம் பெறத் தோன்றின . . . "[1]

ஏழுவகையான இசைகளினின்று ஏழுவகையான தாண்டவங்கள் தொன்றின என்று கூறிய பின்னர், அவற் றின் பெயரைப் பெருமான் பார்வதிக்குக் கூறுகிறார் :

'மாதவர் பரவும் ஆநந்த நடனம்,
வயங்குறு சந்தியா நடனம்,
காதலி! நின் பேர்க் கௌரி தாண்டவமே,
கவின் பெறு திரிபுர நடனம்,
ஓதுமா காளி தாண்டவம், முனிதாண்டவ
மொடும், உலகசங்கார
மேதகு நடனம், இவை சிவை ! நாம்
விதந்த நன்னுமம் என்றுணர்தி'.[2]

இதனால், ஆநந்த தாண்டவம், சந்தியா தாண்டவம், கௌரிதாண்டவம், திரிபுர தாண்டவம, காளி தாண்டவம், முனி தாண்டவம், சங்கார தாண்டவம் என ஏழு தாண்ட வங்களின் பெயர் கூறப்பட்டன. மேலும், இந்தத் தாண்ட வங்களை எங்கெத்த இடங்களில் செய்தருளினார் என்பதை யும் கூறுகின்றார்.

'பிரம கற்பங்கள் தோறும் பேணுனர் பொருட்டால் இந்தத்
திருநடம் ஏழும் செய்தும். செப்பும் அத்தானம் கோண்மோ.
'அரவும் அம்புலியும் போற்றும் அருள்தில்லை யம்பலத்தில்
பரவும் ஆந்நத தாண்டவம் செய்வோம்' பைம்பொற் பாவாய்!

---

1 திருப்புத்தூர்ப் புராணம் : கௌரிதாண்டவச்சருக்கம். 9.

2 திருப்புத்தூர்: 'கௌரிதாண்டவம். 10,

இவர் மணி மாடக் கூடல் இரசித சபையில் நின்று
தவர் அடி பரவச் செய்தும் சந்தியா தாண்டவம், செம்
பவளமெல் இதழி! நின்பேர்ப் பரவு தாண்டவத்தை என்றும்
சிவமிகு திருத்தலத்தில்1 சிற்சபை யதனில் செய்வோம்.

'அத்திரி கூட வெற்பென் றறைதிருக் குற்றலத்தில்
சித்திர சபையில் செய்வோம் திரிபுர தாண்டவம். பூம்
கத்திகைக் குழலி! ஆலங் காட்டினிற் காளி தாண்ட
வத்தை நன்கியற்று கிற்போம் இரத்தின சபையில் மாதோ.'

'தாம்பிர சபையில் தேவதாருவன நெல்வேலி
ஆம்பிர பலதலத்தில் ஆற்றுதும் முனி நிருத்தம்.
காம்பிரங் குறுதோளி! சங்கார தாண்டவத்தை யாவும்
கூம்பிரவதனில் நின்று குலவுற இயற்றுகிற்போம்.'2

தில்லைப் பொன்னம்பலத்திலே ஆநந்த தாண்டவத்தையும், மதுரை வெள்ளியம்பலத்திலே சந்தியா தாண்டவத்தையும், பாண்டி நாட்டுத் திருப்புத்தூர் சிற்சபையிலே கௌரிதாண்டவத்தையும், திருக் குற்றலத்துச் சித்திர சபையிலே திரிபுர தாண்டவத்தையும், திருவாலங்காட்டு இரத்தின சபையிலே காளி தாண்டவத்தையும், திருநெல்வேலி தாம்பிர சபையிலே முனி தாண்டவத்தையும், இருண்ட நள்ளிரவிலே சங்கார தாண்டவத்தையும் இறைவன் செய்தருளுகிறார் என்று புராணம் கூறுகின்றது.3

இதனால், பஞ்ச கிருத்தியங்களின் பொருட்டுச் செய்யப்படும் தாண்டவங்கள் ஏழு என்பதை அறிகின்றோம்.

---

1 இது பாண்டி நாட்டுத் திருபுத்தூர்

2 திருப்புத்தூர் : கௌரிதாண் : 11, 12, 13, 14.

3 இவ்வாறு புராணங்கள் கூறுவதில் முக்கிய செய்தியொன்று தொக்கி நிற்கிறது. அஃதென்னவெனில் இத்தாண்டவங்கள் தமிழ் நாட்டு எல்லைக்குள்ளே செய்யப்பட்டன என்பதே சிவபெருமானின் தாண்டவ உருவம் தமிழ் நாட்டிலே தோன்றியது என்று கூறப்படுவதற்கு இதுவும் ஒரு தக்க சான்றாகும்.

இங்கு ஒரு ஐயம் தோன்றுகிறது. சிவபெருமான் செய்தருளுவது பஞ்ச கிருத்தியம் எனப்படும் ஐந்து செயல் தானே? ஆகவே, அவர் செய்யும் தாண்டவமும் ஐந்தாகத்தானே இருக்க வேண்டும்? ஏழாக இருப்ப தேன்? இதற்குக் காரணம் யாது? ஐந்தாக இருக்க வேண் டியது எப்படி ஏழாயிற்று? இதற்கு விடை யாது?

சிந்தித்துப் பார்ப்போம். ஐஞ்செயலையும் தனித் தனியே காட்டுகிற தாண்டவங்கள் ஐந்து; ஐஞ்செயலையும் சேர்த்து ஒரே தடவையில் செய்கிற ஆநந்த தாண்டவம் (நடராச உருவம்) ஒன்று. ஆகத் தாண்டவங்கள் ஆறு ஆயின. நன்று; அப்படியானால் ஏழாவது தாண்டவம் எந்தச் செயலைக் குறிக்கிறது?

இக் கேள்விக்கு விடை கண்டிலேம். அறிஞர்களைக் கேட்டேம். விடை பெற்றிலேம். புராணச் சைவர்களும் சித்தாந்த சைவர்களும், ஆகமச் சைவர்களும், சிற்பிகளும் விடை கூறாமற் போகவே, மீண்டும் நூலில் புகுந்து விடை தேடினேம். திங்கள் பல கழிந்தன. இந்த ஒரு ஐயத் திற்குத் தெளிவு காண முடியாமல் நெடுநாள் இடருற்ற பிறகு, கடைசியில் 'உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ?' என்றபடி விடை காணப் பெற்றேம்.

திருப்போரூர் சிதம்பரசுவாமிகள் இயற்றிய 'பஞ்சதி காரவிளக்கம்' என்னும் சிறு நூலில் யாம் நெடுநாள் அலைந்துதேடிய விடையைக்கண்டேம். அப்பொழுது, எமக் குண்டான மகிழ்ச்சியை யாமே யறிவேம். அது எத்த கைய மகிழ்ச்சி என்பது ஆராய்ச்சியில் உழன்று அல்லற் படுவோர்க்கன்றி ஏனையோர்க்கு விளங்காது. நன்று. இந் நூலில் கண்ட விடை யாது? ஏழாவது தாண்டவம் என்ன தாண்டவம்? ஐந்தொழில்களில் காத்தல் தொழில் இரண் டாகப் பிரிக்கப்பட்டிருப்பதுதான் இதில் கண்ட விடை. அதுஇது :

" சடமதனிற் சிருட்டி திதி சங்காரம் நிகழும்.
தரும் உயிரில் திரோபவம் அனுக்கிரகம் தக்கும்:
திடமுறும் அத்திதி இரண்டாம் சுக துன்பம் அருந்தும்
செய்தியின்; அம்முறையால் செய்தொழில் ஆறும்*

உயிர்கள் நல்வினை தீவினை என்னும் இரண்டுவித கர்மங்களைச் செய்கின்றன. ஆகவே, நல்வினைக்கேற்ப இன்பங்களையும் தீவினைக்கேற்ப துன்பங்களையும் அனுபவிக்க வேண்டும். காத்தல் செயலைச் செய்கிற கடவுள், உயிர்கள் செய்த இருவினைகளுக்குத் தக்கப்படி இன்பக்காத்தல், துன்பக்காத்தல் என்று இரண்டுவிதக் காத்தல் செயலைச் செய்கிறார். எனவே, அவர் செய்யும் ஐந்தொழில் ஆறும், ஐஞ்செயலையும் ஒருமிக்கச்செய்யும் ஆநந்தத் தாண்டவம் ஒன்றும் ஆகத் தாண்டவங்கள் ஏழாயின.

தாண்டவங்கள் ஏழு என்பதற்கு ஆதாரத்தைத்தேடிக் கண்டோம். இதனோடு நமது வேலை நின்றுவிடவில்லை. இனி ஏழு தாண்டவங்களுக்கும் ஏழு சிற்ப உருவங்களைக் கண்டு பிடிக்கவேண்டும். நல்ல காலம்; ஆநந்த தாண்டவம் என்னும்நடராசத்திருவுருவம் எல்லாச்சிவன் கோவில்களிலும் இருக்கின்றது- இது ஐஞ்செயலையும் ஒருமிக்கக்காட்டுகிற தாண்டவ உருவம் என்பதை அறிவோம். ஆனால் ஏனைய ஆறு தாண்டவச் சிற்ப உருவங்களைக் கண்டுபிடிக்க வேண்டுமே. இது எளிதான காரியம் அன்று. ஒரு காலத்தில், தமது நாட்டில் சிற்பக்கலை சிறப்படைந்து உயர்நிலை பெற்றிருந்தது. அக்காலத்தில் கலைவாணர் சிறப்புற்றிருந்தனர். அவர்கள் அமைத்த சிற்பக்கலை உருவங்களும் நாட்டில் நிறைந்திருந்தன. சிற்பக் கலையின் அழகையும் இனிமையையும் சுவைத்தின்புற்ற கலைச்செல்வர்களும் இருந்தனர். இக்காலத்திலோ கலைச் செல்வர்களைக் காண்பது அரிதாயிருக்கிறது. கலைவாணர்களைக்காண்பது அதி லும் அரிதாயிருக்கிறது. கலைச் செல்வங்களைக்காண்பது

---

* பஞ்சகிருத்திய விளக்கம் 27

அரிதிலும் அரிதாயிருக்கிறது. இந்த நிலையிலே ஆறுவித தாண்டவச் சிற்பங்களைக் கண்டுபிடிப்பது எப்படி? அவை எங்குள்ளன என்பதைத் தேடி அலைந்து கண்டுபிடிக்கும் வேலையில் இறங்க வேண்டியிருக்கிறது. தேடிக்கண்டு பிடித்தாலும் எந்தச்சிற்பம் எத்தத் தாண்டவத்தைக் குறிக்கிறது என்பதை எவ்வாறு கண்டுகொள்வது? தாண்டவச்சிற்ப உருவங்களுக்கு ஆக்கல் தாண்டவம், காத்தல் தாண்டவம் அழித்தல் தாண்டவம், மறைத்தல் தாண்டவம், அருளல் தாண்டவம் என்னும் பெயர் கூறப்படுவதில்லை; வேறு பெயர்கள் கூறப்படுகின்றன. எனவே தாண்டவச் சிற்ப உருவங்களைக் கண்டுபிடிக்க வேண்டிய முயற்சியும் கண்டு பிடிக்கப்பட்ட சிற்ப உருவங்கள் எவை எவை எந்தெந்த தாண்டவத்தைக் குறிக்கின்றன என்பதை அறிய வேண் டிய ஆராய்சசியும் நம்மைச் சார்ந்திருக்கின்றன. இவ்வாறு முன்பின் அறியாத புதிய பாதையில் சென்று இவ்வாராய்சி யைச் செய்து முடித்து தாண்டவத் திருவுருவங்களையும் அவற்றின் கருத்தையும் கலையழகையும் கூற முற்படு கின்றேம். ஆகவே, இதில்

> " குணம் நாடி குற்றமும் நாடி அவற்றுள்
> மிகை நாடி மிக்க கொள்ளல் "

கற்றறிந்தார் கடமையாம்.



படம் 2
காளிகா தாண்டவம்

முதலாவது

# படைத்தற் செயலாகிய காளிகா தாண்டவம்*

ஐஞ் செயல்களில் முதலாவதாகிய ஆக்கல் (படைத்தல்) செயலைக் குறிப்பது காளிகா தாண்டவம் ஆகும். இதற்கு முனி தாண்டவம் என்னும் பெயரும் உண்டு.

இந்தத் தாண்டவ மூர்த்தியின் உருவம் இவ்வாறு இருக்க வேண்டும் என்று கூறப்படுகிறது; எட்டுகைகள். வலது புறத்து நான்கு கைகளில் துடி, பாசம், சூலம், அபயமுத்திரை உள்ளன. இடது புறத்து நான்கு கைகளில் தீச்சுடர், மணி, கபால பாத்திரம், வீசியகரம் (கஜ அஸ்தம்) உள்ளன. துடி ஏந்தியகை காதருகில் இருக்க வேண்டும். இடது காலைச் சற்றுத் தூக்கிஇருக்க வேண்டும். காலுக்குக் கீழே முயலகன் இருப்பான்.

இவ்வாறு காளிகா தாண்டவத்தின் உருவ அமைப்பைப் பற்றிப் புத்தகத்தில் படித்து விட்டால் இந்தச் சிற்ப உருவத்தின் அமைப்பைக் கண்டு கொள்ள முடியாது. கை தேர்ந்த சிற்பி ஒருவர் இக்கருத்துக்களை அமைத்துச் சிற்ப உருவமாகச் செய்து காட்டினால்தான் தெரிந்து கொள்ள முடியும். இந்தச் சிற்ப உருவத்தை எங்கே காண்பது?

நற்காலமாக இந்தத் தாண்டவத்தின் சிற்ப உருவம் கிடைத்திருக்கிறது. இது கலையாராய்ச்சியாளருக்கு

---

* இந்தக் காளிகா தாண்டவத்தைக் காளி தாண்டவம் எனக் கருதி மயங்கக் கூடாது- காளிகா தாணடவம் வேறு.காளி தாண்டவம் வேறு. காளிகா தாண்டவம் படைத்தற் செயலைச் செய்வது. காளி தாண்டவம் அருளல் செயலைச் செய்வது.

மகிழ்ச்சியளிக்கும் நற் செய்தியாகும். தஞ்சை மாவட்டத்துத் திருநல்லூரில் உள்ள கலியாண சுந்தரர் கோவிலில் இவ்வுருவம் இருக்கிறது. இக்கோயில், பாவநாசம் இரயில் நிலையத்திலிருந்து கிழக்கே மூன்று மைலுக்கப்பால் இருக்கிறது. இக்கோயிலில் உள்ள காளிகா தாண்டவ மூர்த்தியின் உருவம், நூலை மட்டும் படித்துத் தெரிந்து கொள்ள முடியாத வேறு பல செய்திகளையும் வெள்ளிடை மலைபோல் விளக்குகிறது. (படம் 2 காண்க.) இந்தப் படத்தில் கபாலம் தாங்கிய இடதுகை காணப்படவில்லை; உடைந்துவிட்டது போலும். மற்ற எல்லா உறுப்புகளும் நன்னிலையில் உள்ளன. இது வெண்கலத்தினால் செய்யப் பட்டது.

அழகுள்ள இந்தச் சிற்பத்தைக் கூர்ந்து பாருங்கள். காலடியில் உள்ள முயலகனை நன்றாக நோக்குங்கள். பாதங்கள், கைகள், கைகளில் காணப்படும் பொருள்கள், உடம்பின் சாய்வு, சடைமுடி முதலியயாவற்றையும் பாதாதி கேசம் வரையில் உற்றுப் பாருங்கள். முயலகன் கால்களை நீட்டி எதிர்முகமாக நோக்கி அமர்ந்து இறுமாந்திருக்கிறான். ஏனைய தாண்ட உருவங்களில் இது போன்று நிமிர்ந்து அமர்ந்துள்ள முயலகனைக் காண முடியாது. ஏனைய தாண்டவ உருவங்களில், முயலகன் குப்புறக் கவிழ்ந்து படுத்துக் கிடக்கிறான். பட்டினத்தடிகள் கூறிய படி "முரனறு முயலகன் நைந்து நரல" தாண்டவப் பெருமான், முயலகனை மிதித்து அழுத்துகிறார். இந்தச் சிற்பத்திலோ, அவற்றிற்கு மாறாக, முயலகன் குப்புறக் கிடவாமலும் மிதித்து அழுத்தப்படாமலும் யாதொரு கவலையும் இன்றி நிமிர்ந்து உட்கார்ந்திருக்கிறான். தாண்டவப்பெருமானுடைய பாதம் அவனை மிதித்து அழுத்த வில்லை. துடி ஏந்திய கை காதுக்கருகில் இருக்கிறது. ஆனால் தீ ஏந்தியகை அப்பால் விலகியிருக்கிறது.

இந்தக் குறிப்புகளைக் கொண்டு நாம் தெரிந்து கொள்வது என்ன? முயலகன், உயிர்களிடம் பொருந்தி

யுள்ள நல்வினை தீவினை என்னும் இருவினைகளைக் (மலங்களைக்) குறிக்கிறான் என்பதை அறிவோம். இந்தத் தாண்டவத்தில் மலத்தைக் குறிக்கும் முயலகன் நிமிர்ந்து உட்கார்ந்திருக்கிறான். தாண்டவ மூர்த்தியின் பாதம் அவனை அழுத்தி மிதிக்கவில்லை. இக்குறிப்புகளைக்கொண்டு, உயிர்களிடத்தில் படிந்துள்ள மலம் தொழிற்பட்டு இருவினைச் செயல் நன்கு நிகழ்கிறது என்பதை அறியலாம். அன்றியும், சிவனுடைய வலது கையில் உள்ள துடி, அவருடைய செவிக்கு அருகில் ஒலிக்கப்படுவதையும் காண்கிறோம். துடியை ஒலித்து அவ்வோசையிலிருந்து படைத்தற்றொழிலைக் கடவுள் செய்கிறார் என்று நூல்கள் கூறுகின்றன. "தோற்றந் துடியதனில்" என்பதும், "அரன் துடி தோற்றம்" என்பதும் ஆன்றோர் வாக்குகள். துடியில் இருந்து உண்டாகிற நாதம் ஓங்கார ஒலியாகும். அன்றியும், இறைவனுடைய செவி ஓங்கார வடிவத்தைக் குறிக்கிறது என்பர். நாதத்தை உண்டாக்கும் துடியும் ஓங்காரத்தைக் குறிக்கும் செவியும், இந்தப் படைப்புத் தாண்டவத்தில் ஒன்றுக்கொன்று அண்மையில் சேர்ந்துள்ளன.

மற்றும், இன்னொரு கையில் பாசம் காணப்படுகிறது. பாசமானது ஆணவம், கன்மம், மாயை என்னும் மும்மலங்களைக் குறிக்கிறது. மற்றொரு கையில் திரிசூலம் பிடித்திருக்கிறார். திரிசூலமானது சாத்வீக, ராஜச, தாமசம் என்னும் மூன்று குணங்களைக் குறிக்கிறது. எனவே, உயிர்களைப் பற்றிக் கிடக்கிற மும்மலம், மூன்று குணங்கள், இருவினைகளின் எழுச்சி, துடியை ஒலித்தல் ஆகிய குறிப்புகளை எல்லாம் ஒருங்கு சேர்த்துப் பார்க்கும் போது, இந்தத் தாண்டவமானது, ஐந்தொழில்களில் முதலாவதாகிய படைத்தல் செயலைக் குறிக்கிறது என்பது ஐயமற விளங்குகிறது.

இத்தத்துவக் கருத்துக்களை எல்லாம் ஒருங்கு அமைத்துச் சிறந்த உருவமாக்கிக் 'கலையழகு பொருந்த

இச்சிற்பத்தை அமைத்துக் கொடுத்த சிற்பி யாவரோ? அவர் பெயர் யாதோ? தாண்டவப்பெருமான், துடி யேந்திய கையைக் காதருகில் பிடித்திருப்பதும் துடியின் பக்கமாகச் செவி சாய்ந்திருப்பதும் துடியில் ஒலி உண்டாகி ஒலித்துக் கொண்டிருக்கிறது என்பதை இச்சிற்பம் அழகுறக் காட்டுகிறது. இதனைக் காணும்போது நமது செவியிலும் துடியின் நாத ஓசை கேட்பது போலத் தோன்றுகிறது! ஆணவத்தோடு இறுமாந்திருக்கும் முயலகன் உருவம், இருவினைகளின் இறுமாந்த எழுச்சியை எவ்வளவு தெளிவாகக் கூட்டுகிறது பாருங்கள். சிறிதளவு தூக்கிய திருவடியின் நிலைக்கு ஏற்ப, வீசியகை (கஜஹஸ்தப்) தாழ்ந்திருப்பது பொருத்தமாகவும் அழகாகவும் இருக்கிறது. மாயையின் தொழில் வளர்ச்சியுற்றுச் சிறப்படைகிற இந்தப் படைப்புத் தாண்டவத்தில், மாயையை எரிக்கும் அனல் ஏந்திய கை அகல விலகியிருப்பது, சிற்பக்கலைஞர் சாத்திரக் கருத்தை நன்றாக உணர்ந்திருக்கிறார் என்பதைத் தெரிவிக்கிறது. தாண்டவப் பெருமான் தாண்டவத்தின் வேகத்தை அடக்கிக்கொண்டு, முயலகனுக்கு முழு உரிமையைக் கொடுத்திருக்கிறார். தாண்டவம் வேகமாக நடைபெறவில்லை என்பதை அவரது கைகளும் கால்களும் மாத்திரம் காட்டுகின்றன என்று கருதவேண்டா; அவரது சடை முடியும் தெரிவிக்கிறது. சடைமுடி, ஆனந்த தாண்டவத்தில் அவிழ்ந்து அலைவது போல இல்லாமல், புனைந்தது புனைந்தபடியே யிருக்கிறது.*

பல சொல்வானேன்? கண்ணால் பார்த்துக் கருத்தினால் அறிந்து கொள்ளவேண்டிய பல குறிப்புகள் இச்சிற்பத்தில் காணப்படுகின்றன. கண்ணும் கருத்தும் உள்ளவர் கண்டு தெளிக.

---

*இந்த உருவம் காளிகா தாண்டவம் என்பதை அறியாத மக்கள், சடைமுடி அவிழாமல் இருப்பதைக்கொண்டு சடை கட்டி நடராசர் என்று இவ்வுருவத்திற்குப் பெயர் வழங்குகிறார்கள்.

திருநெல்வேலி தாம்பிர சபையில் இந்தத் தாண்டவம் நிகழ்வதாகப் புராணங்கள் கூறுகின்றன. இந்தச்சிற்ப உருவம் சோழர் காலத்தது. கி. பி. 1,000க்கும் 1,200க்கும் இடைப்பட்ட காலத்தில் இது உண்டாக்கப்பட்டிருக்கலாம்.

" இடங் கொண்ட சத்தியும் எந்தை பிரானும்
நடங் கொண்டு நின்றமை யானும் அறிந்தேன்
படங்கொடு நின்ற இப் பல்லுயிர்க் கெல்லாம்
அடங்கலும் தாமாய் நின்றாடு கின்றாரே "

இரண்டாவது

# காத்தல் செயலாகிய

# கௌரி தாண்டவம்

சிவபெருமானுடைய ஐஞ்செயல்களில் இரண்டாவதாகிய காத்தல் செயலைக்குறிக்கும் தாண்டவத்தை இங்கு ஆராய்வோம். காத்தற் செயல் இரண்டு விதம் என்று முன்னரே கூறியுள்ளோம். அதாவது, உயிர்கள் செய்த நல்வினை தீவினைகளுக்கு ஏற்றபடி, அவற்றை இன்ப நிலையிலும் துன்பநிலையிலும் நிறுத்தி, இன்ப துன்பங்களை இறைவன் துய்க்கச் செய்கிறார் என்று கூறினோம். ஆகவே, இரண்டுவித காத்தல் செயல்களுக்கேற்ப இந்தத் தாண்டவமும் இரண்டு வகைப்படும். இத்தாண்டவங்களுக்குக் கௌரி தாண்டவம் என்றும், சந்தியா தாண்டவம் என்றும் பெயர் கூறப்படும். இவற்றை, முறையே ஆராய்ந்து காண்போம். முதலில் கௌரி தாண்டவத்தை ஆராய்வோம்.

கௌரி தாண்டவத்திற்குப் புஜங்கத்திராசம், இரக்ஷா தாண்டவம், இலக்குமி தாண்டவம் என வேறு பெயர்களும் உண்டு. கௌரியம்மையார் பொருட்டுச் செய்தபடியால் கௌரிதாண்டவம் என்றும், பாம்பை அச்சுறுத்தி ஆடியபடியால் புஜங்கத்திராசம் என்றும் (புஜங்கம்= பாம்பு), காத்தல் செயலைச் செய்கிறபடியால் இரக்ஷா தாண்டவம் என்றும் இலக்குமி காணும் பொருட்டு இத்தாண்டவத்தை ஆடியபடியால் இலக்குமி தாண்டவம் என்றும் பெயர்கள் கூறப்படுகின்றன.

சிவ சக்தியாகிய கௌரியம்மையார், பெருமானிடத்தில் ஊடல் கொள்ள, அவ்வூடலைத் தீர்க்கும் பொருட்டு இறைவன் இத்தாண்டவத்தைச் செய்தார் என்பது

புராணக்கதை. கௌரியம்மையார் தவங்கிடந்து இத் தாண்டவத்தைக் காணப்பெற்ருர் என்பது மற்ருெரு புராணக்கதை. இக்கதைகளில் சிறு வேறுபாடு காணப் பட்டபோதிலும் கருத்து ஒன்றே. அதாவது, கௌரியம் மையார் காணும் பொருட்டு இத்தாண்டவம் செய்யப் பெற்றதுஎன்பது.இந்தக் கௌரிதாண்டவத்தையேதாமும் காணவேண்டுமென்று திருமகள் வேண்டிக்கொள்ள, அவர் பொருட்டு மீண்டும் ஆடியருளியபடியால் இதற்கு இலக்குமி தாண்டவம் என்னும் பெயரும் ஏற்பட்டது.*

தாருகவனத்து முனிவர் யாகம் செய்து ஒரு பாம்பை யுண்டாக்கி அதைச் சிவபெருமான்மேல் ஏவிவிட, அப் பாம்பைச் சிவபெருமான் தமது கையில் ஏந்தி அதனை அச்சுறுத்தி ஆடியபடியால், இத்தாண்டவத்திற்குப் புஜங் கத்திராசம் என்னும் பெயர் ஏற்பட்டது என்பது ஒரு புராணக்கதை. வாசுகி, கார்க்கோடகன என்னும் பாம்பர சர்கள் தவங்கிடந்து வேண்டிக்கொள்ள, அவர்களுக்கிரங்கி சிவபெருமான் அவர்களைத்தமது திருமேனியில் தரித்துக் கொண்டு ஆடியருளினர் என்பது மற்ருெரு புராணக்கதை. இக்கதைகளிலும் சிறு வேறுபாடு காணப்பட்டபோதிலும் பாம்புகள் முக்கிய இடம் பெற்றிருப்பது கருதத்தக்கது.

பாம்பு, குண்டலினி சக்தி என்பதும், இது காத்தல் செயலுக்கு அறிகுறி என்பதும் சாத்திரக் கருத்து. "பொரி பரவம் சேர்ப்பது, வானத்திரைகடல் சூழுலகம் இதனைக்காப்பது காரணமாகக் கொண்டான்" என்று திருநாவுக்கரசர் கூறியிருப்பதும் ஈண்டுக் கருதத்தக்கது.

இத்தாண்டவத்தில், கௌரியம்மையாரின் தொடர் பும், திருமகளின் தொடர்பும், பாம்பின் தொடர்பும் பொருந்தியுள்ளன. கௌரியம்மையார் உலகத்தைக் காப்பவர். திருமகள் செல்வப்பொருளைத் தருபவர். பாம்பு மக்கட் பேற்றின் அறிகுறி. எனவே, உயிர்கள்

* திருப்புத்தூர்ப்புராணம், இலக்குமி தாண்டவம், 206.

செல்வப்பேறும், மக்கட் பேறும் பெற்று வாழ்வதற்காக இத்தாண்டவத்தை இறைவன் செய்கிறார் என்று கருதலாம். புராணமும், "மங்கள சொரூப, பரமகல்யாண மங்களங்களைக் கொடுக்கிற" கௌரி தாண்டவம் என்று கூறுகிறது. மேலும், "அலகிலவாம் பல்பொருள் பெருக்கும், பெறற்கரு நன்மகப் பேறும் முன்னுற யாவும் பெற்று வாழ்ந்து இன்பம்" அனுபவித்துப் பிறகு உயிர்கள் வீடுபேறடைய வேண்டும் என்று கௌரியம்மையார் வேண்டிக்கொள்ள, அவ்வாறே ஆகுக என்று சிவபெருமான் வாக்களித்தார் என்று புராணம் கூறுகின்றது.1

மற்றும், இக்கௌரி தாண்டவத்தைக்கண்டு வணங்குவோர்.

"...... அப்பரன் அருளால்,
திருநோக்கால், பல்கு செல்வம்
பவித்து, இரப்போர்க்கு அளித்து, இனிய மகப்பேறு
முதற்பேறு படைத்து ...."

வாழ்வார்கள் என்று புராணம் கூறுகிறது. 2

இந்தத் தாண்டவத்திற்கு இரக்ஷா (காத்தல்) தாண்டவம் என்னும் பெயர் உண்டென்றும், இத்தாண்டவத்தைக்கண்டு வணங்குவோர் கல்விச் செல்வம் பொருட் செல்வம் இரண்டையும் பெற்று வாழ்வர் என்றும் திருக்கூவப்புராணம் கூறுகிறது.3

எனவே, பொருட் செல்வம், கல்விச் செல்வம், மக்கட் செல்வம் ஆகியபேறுகளை அளிப்பது இந்தத் தாண்டவ தரிசனத்தின் பயன் என்பது தெரிகிறது. புரட்டாசித் திங்களில் முழு நிலாநாளில் சிவபெருமானை முறைப்படி பூசைசெய்து வணங்கி, புஜங்கத்திராசம் என்றும் இத்

1 திருப்புத்தூர், கௌரி தாண் 211.

2 திருப்புத்தூர் : இலக்குமி தாண் : 142.

3 செங்நெல் வைத்த சருக்கம். 36.

தாண்டவத்தைத் தரிசித்தால் தனப்ராப்தம் (செல்வப் பேறு) கிடைக்கும் என்று காரணாகமம் கூறுகிறது.

இனி, இத்தாண்டவத்தின் உருவ அமைப்பைக் காண்பாம். இக்கௌரி தாண்டவத்தில் சிவபெருமானுக்கு எட்டு அல்லது பத்துக் கைகளும் உண்டென்று நூல்கள் கூறுகின்றன. ஆனால், நான்கு கைகளை அமைப்பதுதான் சிற்பிகளின் வழக்கம். வலது கைகள் இரண்டில் துடி (உடுக்கை)யும் அபய முத்திரையும் இருக்கும். இடது கைகள் ஒன்றில் பாம்பை ஏந்திக் கொண்டிருப்பார். மற்றொரு கையைக் கஜ ஹஸ்தமாக அமைந்திருப்பார். வலது காலை முயலன் முதுகில் ஊன்றி இடது காலைத் தூக்கி நின்று தாண்டவம் புரிவார். இடது புறத்தில் கௌரியம்மையாரும் வலது புறத்தில் நந்தி தேவரும் நின்று நடனத்தைக் காண்பர் கௌரியம்மையாருக்குப் பதிலாகத் திருமால் இருப்பார் என்று மயமதம் என்னும் நூல் கூறுகிறது. சிவ சக்தியாகிய கௌரியின் ஆண் உருவந்தான் திருமால் என்பது சாத்திரக் கருத்து ஆகையால் இதில் கருத்து மாறுபாடு இல்லை.

இந்தக்கௌரி தாண்டவத்தின் சிற்ப உருவம் நற்காலமாக நமக்குக் கிடைத்திருக்கிறது. (படம் 3 காண்க.) வெண்கலத்தால் செய்யப்பட்ட தொன்மை வாய்ந்த இச் சிற்ப வுருவம் காஞ்சீபுரத்துக் கடுத்த கூரம் என்னும் கிராமத்திலிருந்து கிடைத்துள்ளது. இது பல்லவர் காலத்துச் சிற்பம் என்று கருதப்படுகிறது. இச்சிற்ப உருவத்தின் இடது கையில் உள்ள பாம்பு உடைந்து விட்டது. திருவாசி முதலியனவும் காணப்படவில்லை. இப்போது இவ்வுருவம் சென்னை அரசாங்கக் காட்சி சாலையில் இருக்கிறது. கௌரி தாண்டவ மூர்த்தி என்று பெயர் பெற வேண்டிய இச்சிற்பத்திற்கு "நடேசர்" என்று பெயர் கொடுத்திருக்கிறார்கள். நடேசர் என்பதும் நடராஜர் என்பதும் தாண்டவமூர்த்திகளுக்குப் பொதுப்பெயர். இதற்கு

கௌரிதாண்டவ மூர்த்தி என்று சரியான பெயர் கொடுக்காத காரணம் யாதோ தெரியவில்லை.

இச்சிற்ப உருவத்தின் கலையழகைக் காண்போம். இதனுடன் சேர்ந்திருக்க வேண்டிய சில பகுதிகள் காணப்படாமல் சிதைந்துள்ள நிலையிலும், இச்சிற்பத்தில் இத் தாண்டவத்திற்குரிய பொருளமைதியும் . கலைபழகும் நிரம்பி யிருக்கின்றன.

முயலகனைப் பாருங்கள். எதிர்புறமாகத் தரையில் விழுந்து கிடக்கிறான். தாண்டவப்பெருமானுடைய பாதம் இவன் முதுகை மிதித்திருக்கிறது. இந்த நிலை, படைத்தற் செயலாகிய காளிகா தாண்டவத்தில், முயலகன் மிதிக்கப் படாமல் இருக்கும் நிலைக்கு அடுத்த நிலையாக இருக்கிறது. அந்தக் காளிகா தாண்டவ உருவத்தில் உள்ள திருவடி நிலையையும் முயலகன் இருப்பையும், இந்தக் கௌரி தாண்டவத்தில் உள்ள திருவடி நிலையுடனும் முயலகன் இருப்புடனும் ஒப்பிட்டுப் பார்த்தால், இது நன்கு விளங்கும். அந்தத் தாண்டவத்தில் முயலகன் நிமிர்ந்து உட்கார்ந்து மிதிபடாமல் இருக்கிறான். இந்தக் கௌரி தாண்டவத்திலோ முயலகன், மிதியுண்டு குப்புற விழுந்து கிடக்கிறான். ஆனால், ஆனந்த தாண்டவத்தில் உள்ளது போன்று முயலகன், நடராசப்பெருமானின் வலப்புறம் தலையும் இடப்புறம் காலுமாகக் கிடக்காமல், எதிர்ப்புறமாக விழுந்து கிடக்கிறான்.

இடது கால் குஞ்சிதபாதமாகத் தூக்கப்பட்டிருக்கிறது. ஆனால், முந்திய தாண்டவத்தைவிட சற்று உயரமாகத் தூக்கியிருக்கிறது. தூக்கிய திருவடிக்கு ஏற்ப வீசியகரம் அமைந்திருப்பது பொருத்தமாகவும் அழகாகவும் காணப்படுகிறது. இடதுகை ஒன்றில் பாம்பு இருக்கிறது. பாம்பின் உருவம், இச்சிற்பத்தில் உடைந்து போய்விட்டபடியால், முழு உருவம் காணப்படவில்லை. வலது கையில் உள்ள் துடி, காளிகா தாண்டவத்தில்,

காதுக்கருகில் இருப்பது போலில்லாமல், விலகி யிருக்கிறது. முகம் சற்றுக் கடுமையாகக் காணப்படுகிறது. பாம்பை அச்சுறுத்துகிற நிலையாகையால், அதற்கேற்ப, இவ்வாறு சிற்பி அமைத்திருக்கிறார். இந்தத்தாண்டவம் முதல் தாண்டவமாகிய காளிகா தாண்டவத்தைவிடச் சற்று வேகமாக நிகழ்கிறது. ஆனால், ஆநந்த தாண்டவம் போன்று அதிக வேகமாக நிகழவில்லை. இச்சிற்பத்தின், முகம், கைகள், கால்கள், அணிகலன்கள் யாவும் தக்கபடி அமைந்து அழகுறக் காணப்படுகிறன.

இந்தத் தாண்டவத்தை இறைவன், பாண்டி நாட்டுத் திருப்புத்தூரில் நிகழ்த்தியதாகப் புராணங்கள் கூறுகின்றன.

பாம்பை அச்சுறுத்தல் என்னும் பொருளுடைய புஜங்கத்திராசம் என்னும் பெயர் உள்ளது கொண்டும் கூத்தப் பெருமான் முகத்தில் உவகைக் குறி காணப்படாமல், சிறிது கோபக் குறி காணப்படுவது கொண்டும் இத் தாண்டவம், இருவகைக் காத்தல் செயல்களில் துன்பக் காத்தல் செயலைக் குறிக்கிறது என அறியலாம்.

இது பல்லவர் காலத்துச் சிற்பம் என்றுகூறினும் பல்லவர் ஆட்சி கி. பி. 900இல் வீழ்ச்சியடைந்தபடியால் இச்சிற்பம் 10-ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டதாதல் வேண்டும். அதாவது கி. பி. 700-க்கும் 850-க்கும் இடைப்பட்ட காலத்தில் இச்சிற்பம் செய்யப்பட்டிருக்க வேண்டும்.

குறிப்பு: இந்தப் புஜங்கத்ராசத் தாண்டவத்திற்குரிய பாட்டின் இசை, நட்டபாஷை என்றும் தாளம் சிம்மநந்தனம் என்றும் காருகமம் கூறுகிறது. நட்டபாஷை என்பது நாட்டைக் குறிஞ்சி, அல்லது நாட்டை என்பதாம். இந்த இராகம் எட்டுவகைச் சுவைகளில் மருட்கை, உவகை என்பவற்றைக் கொடுப்பதென்றும் கூறப்படுகின்றது.

இரண்டாவது

## காத்தல் செயலாகிய சந்தியா தாண்டவம்.

(தொடர்ச்சி.)

இனி, காத்தல் செயலின் மற்றொரு தாண்டவமாகிய சந்தியா தாண்டவத்தைக் காண்போம். இதற்கு மாலைக் கூத்து, பிரதோஷ நடனம், புஜங்க லளிதம் என்னும் பெயர்களும் உள்ளன. சந்தி, மாலை, பிரதோஷம் என்பன சாயங்கால நேரத்தைக் குறிக்கும் சொற்கள். மாலை வேளையில் ஆடியபடியால் இத்தாண்டவத்திற்கு இப்பெயர்கள் ஏற்பட்டன. பாம்பை அழகுற அணிந்து ஆடியபடியால் புஜங்க லளிதம் என்று பெயர் பெற்றது. கார்க்கோடகன் என்னும் பாம்பைச் சிவபெருமான் அணிந்து கொண்டு ஆடியபடியால் இத்தாண்டவத்திற்கு இப்பெயர் ஏற்பட்டது என்று மயமதம் என்னும் நூல் கூறுகிறது. கயிலாய மலையிலே, மாலை நேரத்திலே, பார்வதி அம்மையாரை இரத்தின ஆசனத்தில் அமரச் செய்து, அவர் காண இறைவன் இத்தாண்டவத்தை ஆடியருளினார் என்றும், அவ்வமயம் திருமால், நான்முகன், இந்திரன் முதலிய எல்லாத் தேவர்களும் ஒருங்கு கூடியிருந்து இதனைக் கண்டு களித்தனர் என்றும் காரணாகமம் கூறுகிறது.

"பொங்கு கங்காதரன் காளம் அயின்றே ஒன்றும்
புகலாமல் இருந்தனன் ஓர் கணப்பொழுது, புலவோர்
அங்கவனை இடைவிடாது அருச்சனை புரிந்தார்;
அத்திதி ஏகாதசியாம்; அடுத்த திதியதனில்
புங்கவர் பாரணம் புசித்தே பூர்த்தியுற்றார். அதன்மேல்
பொருந்து திதியதனில் இமவான்பொற்கொடியை
[வைத்தே

**சங்கரன் சூலம் சுழற்றி நடித்தனன் ஓர் யாமம்
சதுர்மறை நூல் அது பிரதோடமெனவே சாற்றும்."**

என்பது ஆகமத்திரட்டுச் செய்யுள்.

இத்தாண்டவத்தை இறைவன் ஆலமரத்து அடியில் ஆடினார் என்று மயமதம், சிற்ப சங்கிரகம் என்னும் நூல்கள் கூறுகின்றன.

இத்தாண்ட உருவத்தில், சிவபெருமான் காலடியில் முயலகன் அமைக்கப்படுவதில்லை. 8, 10, 12 கைகள் இத்தாண்டவ மூர்த்திக்கு அமைக்கப்படுவதுண்டு. இச்சந்தியா தாண்டவ உருவம் வெவ்வேறு விதமாக அமைக்கப்படுகின்றன. பாப்பு ஒன்றை, தலைப்புறமும் வால்புறமுமாக இரண்டு கைகளால் பிடித்துத் தலைக்குமேல் தூக்கி நின்று ஆடுவதாக இவ்வுருவம் அமைக்கப்படுவது வழக்கம். பாம்பைத் தமது அரையில் சுற்றி அணிந்து இறைவன் இந்நடனத்தைச் செய்வதாக அமைப்பதும் உண்டு. இத்தாண்டவ உருவம் எந்தவிதமாக அமைக்கப்பட்டாலும் இதில் பாம்பு முக்கிய இடம் பெறுகிறது.

சந்தியா தாண்டவத்தின் மிக அழகான சிற்பம் எல்லோரா என்னும் இடத்தில் உள்ள கயிலாச நாதர் கோயில் என்னும் குகைக் கோயிலின் கற்பாறையில் பலகைச் சிற்பமாக (Bas Relief) செதுக்கியமைக்கப்பட்டுள்ளது. கண்ணையும் கருத்தையும் கவருகிற இந்த அழகான சிற்பம் கலையழகு நிரம்பியது. ஆனால், அந்தோ! கலைப்பெருமை உணராத கயவர்களால் இது பிற்காலத்தில் சிதைக்கப்பட்டுள்ளது. சிதைந்த நிலையிலும் இச்சிற்பத்தின் அழகும் அமைப்பும் கலைச்செல்வரின் உள்ளத்தைக் கவர்கின்றன. இந்தப்பலகைச் சிற்பத்தைப் புனையா ஓவியமாக (Outline Drawing) வரைந்து காட்டியுள்ளோம். (படம் 4 காண்க.)

இந்த ஓவியத்தைப் பாருங்கள். இதில், தாண்டவப் பெருமான் மாலைக் கூத்தை நிகழ்த்துவதாகக் காட்டப்



படம் 4.

சந்தியா தாண்டவம்

படுகிறார். சடைமுடி அவிழாமல், நிலாப்பிறை, கங்கை, கொக்கிறகு இவற்றைப் புனைந்து அழகுற விளங்குகிறது. நெற்றிக் கண்ணுடன் கூடிய திருமுகம், அமைதியும் அழகும் உவகையும் பெற்றுத் திகழ்கிறது. நீண்ட காதுகளில் தோடுகள் உள்ளன. கார்க்கோடகன் என்னும் பாம்பைத் தமது அரையில் சுற்றிக் கட்டியிருக்கிறார். அப்பாம்பு படமெடுத்து அழகுற ஆடுகிறது. எட்டுக்கைகள் உள்ளன. வலது புறத்துக் கைகளில் கோடரி, துடி, அபயமுத்திரை காணப்படுகின்றன. மற்றொருகை இடது புறமாக நீண்டு வீசியகரமாக (கஜஹஸ்தம்) அமைந்திருக்கிறது. இடது புறத்திலுள்ள நான்கு கைகளில் ஒன்றைத் தூக்கி வியப்புக்குறி (விஸ்மயம்) யுடனும், மற்றொரு கையை வீசியகரமாக நீட்டி, கஜஹஸ்தமாக உள்ள வலதுகைக்கு ஒப்ப அமைத்தும், இன்னொரு கையைத் தாழ்த்தி வியப்புக் குறி தோற்றுவித்தும், மற்றொரு கையில் எதையோ பிடித்திருப்பது போன்றும் அமைந்திருக்கின்றன. எதையோ பிடித்திருப்பது போன்று காணப்படுகிற கையில் எதைப் பிடித்திருக்கிறார் என்று சிற்பத்தில் காட்டப்படவில்லை. இந்தத் தாண்டவத்தில் சிவபெருமான் தமது கையொன்றில் மயில் இறகு பிடித்திருப்பார் என்று சாத்திரம் கூறுகிறபடியால், இக்கையில் மயிலிறகு இருக்கவேண்டும் என்று துணியலாம்.

முகக் குறிப்பு, உடம்பின் சாய்வு, நடனம் செய்கிற கால்களின் அமைப்பு, அரையில் சுற்றிய படமெடுத்தாடும் பாம்பு, மாலை முதலிய அணிகள், கைகளின் அமைப்பு முதலிய யாவும் இச்சிற்பத்தைப் பெரிதும் அழகுபடுத்துகின்றன. இச்சிற்பத்தில் கலையழகு கனிந்திருக்கிறது. கற்பாறையிலே இவ்வழகான சிற்பத்தை உணர்ச்சி ததும்பச் செதுக்கியமைத்த சிற்பாசாரியினுடைய கைவன்மையும் கலைப்பண்பும் சிறந்து விளங்குகின்றன. இதனைக் காண்பவர் மனம் இதில் நிலைத்து நின்று இதன் அழகில் ஈடுபடுகிறது. இதையமைத்துக் கொடுத்த சிற்பாசாரியின் பெயர் யாதோ?

இந்தச் சிற்பம் கி.பி. 8-ஆம் நூற்றாண்டின் அமைக்கப்பட்டது என்பர்.

இந்தத் தாண்டவத்தைக் கயிலாய மலையிலும், மதுரை வெள்ளியம்பலத்திலும் சிவபெருமான் நிகழ்த்தியருளினார் என்று புராணங்கள் கூறுகின்றன. இதற்குப் புஜங்கலலிதம் என்றும் இன்ப நடனம் என்றும் பெயர்கள் கூறப்படுவதால், இரண்டுவித காத்தல் செயல்களில், இதனை இன்பக் காதல் என அறியலாம். என்னை?

**"நிரைநீர் வளைக்கும் புகழ்நீர்க் கூடல்
வெள்ளியம் பொதுவில் கள்ளவிழ் குழலொடும்
இன்பநடம் புரியும் தேவ நாயகர்"**

என்பது கல்லாடம் (28-ம் செய்யுள்.) இதில், இன்ப நடம் என்பதற்கு மயிலேறும் பெருமாள் பிள்ளை கூறும் விளக்கம் வருமாறு:—" இன்பத்தினால் வரும் நடமாவது இமயப் பருப்பதத்தில் சிவனோடுங் கூடுதற் பொருட்டு அநேக கோடிகாலம் தவம் பண்ணிக் கரணநியோகத்தால் பார்த்துக் கூடும்படியான விலாசியம்; அதற்குச் சித்திர குண்டலி என்று பெயராயிற்று".

சித்திரைத் திங்களில், முழுநிலா நாளில் இறைவனை முறைப்படி பூசித்து வணங்கி இந்தத் தாண்டவத்தைத் தரிசித்தால், இதன் பயனாக ஸ்ரீகரம் (திருவும் கொற்றமும் புகழும்) கிடைக்கும் என்று காரணாகமம் கூறுகிறது.

இந்தத் தாண்டவத்திற்குரிய பாடல், கொல்லி இசையையும் லக்ஷ்மேச தாளத்தையும் பெறும் என்று காரணாகமம் கூறுகிறது. கொல்லி இசையைக் கொல்லிக் கௌவாணம் என்றும் கூறுவர். இதனை இக்காலத்து சிந்து கன்னடா என்றும் நவரோஜ என்றும் கூறுகிறார்கள். இந்தக் கொல்லி இசை, எண்வகைச் சுவைகளில் மருட்கை இளிவரல் என்னும் சுவைகளையுடையது என்பர்.

குறிப்பு: இந்தக் காத்தல் செயலை, மறைத்தல் செயலாகிய திரோபவத்துடன் தொகுத்துக் கூறுவதும் உண்டு.

## மூன்றுவது

## அழித்தல் செயலாகிய

# சங்காரத் தாண்டவம் *

அழித்தல் தாண்டவத்தை இறைவன் நள்ளிரவில் செய்தருளுகிறார் என்று நூல்கள் கூறுகின்றன. "நள்ளிருளில் நட்டம் பயின்றாடும் நாதனே" என்று மாணிக்கவாசகரும், "துஞ்சுடை இருள்கிழியத் துளங்கெரி ஆடுமாறே" என்று திருநாவுக்கரசரும் கூறியுள்ளார்கள்.

உயிர்கள் செய்த இருவினைகளுக்குத் தக்கபடி, அவைகளுக்கு உடம்பு முதலியவற்றை (தனு, கரண, புவன, போகங்களைக்) கொடுத்து, அவ்வினைகளைத் துய்த்துக் கழிகிறவரையில் நிலைபெறச் செய்து, பிறகு அவ்வுடம்பு முதலியவற்றை இறைவன் அழித்து விடுகிறார். (அழித்தல் என்பது உயிரை அழித்தல் அன்று என்பதும், உயிருக்குக் கொடுக்கப் பட்ட உடம்பு முதலியவற்றை அழித்தல் என்பதும் முன்னரே கூறப்பட்டது.) இச்செயலைக் குறிக்கும் தாண்டவம் சங்கார தாண்டவம் என்று கூறப்படுகிறது.

இந்தத் தாண்டவத்தின் உருவம் இவ்வாறு அமைய வேண்டும் என்று சமய நூல்கள் கூறுகின்றன. மூன்று கண்கள்; எட்டுக் கைகள், வலது புறத்துள்ள நான்கு கைகளில் துடி, பாசம், சூலம் என்னும் ஆயுதங்களும் அபய

---

*இந்த மூன்றாவது செயலாகிய சங்கார தாண்டவத்தோடு ஐந்தாவது செயலாகிய அருள் தாண்டவத்தைப் பொருத்திக் கூறுவதும் உண்டு. இதனை ஐந்தாவது தாண்டவமாகிய ஊர்த்துவ தாண்டவத்தில் விளக்கியுள்ளோம். ஆண்டுக் கண்டுகொள்க



படம் 5.

சங்காரத் தாண்டவம்

முத்திரையும் இருக்கும். இடது பக்கத்துக் கைகளில் கபாலம், தீச்சுடர், வியப்புக்குறி, வீசியகரம் (கஜஹஸ்தம்) உள்ளன. பாதத்தின்கீழ் முயலகன் கிடக்கிறான். முயலகன் முதுகில் இடது காலை யூன்றி வலது காலைத் தூக்கி நின்று ஆடுகிறார் இறைவன்.

இந்தத் தாண்டவத்தின் சிற்ப உருவம் எமது பார்வைக்குக் கிடைக்கவில்லை. தேடிப் பார்த்த போது காஞ்சீபுரத்துக் கயிலாச நாதர் கோவில் சுவரில் சுதையில் பலகைச் சிற்பமாக அமைந்த ஒரு சிற்பத்தைக் கண்டோம். இச்சிற்பம் சிதைந்தும் அழிந்தும் உருக்குலைந்தும் உள்ளது. அண்மைக் காலத்திலே இச் சிதைந்த சிற்பம் சாத்திரக் கருத்தை அறியாத சிற்பிகளால் பழுது பார்க்கப் பட்டு சாத்திரக் கருத்துக்குப் பொருத்த மற்ற முறையில் சில உறுப்புகள் சேர்க்கப்பட்டும் பழைய உறுப்புக்கள் சிதைக்கப்பட்டும் உள்ளன. புதிதாகச் சேர்க்கப்பட்ட உறுப்புகளைக் களைந்துவிட்டுப் பார்த்தால், இச் சிற்பம் சங்கார தாண்டவத்தின் அமைதிகளைப் பெற்றிருக்கிறது. ஆகவே, சாத்திரத்தில் கூறப்பட்ட குறிப்புகளைக் கொண்டு இந்தச் சிற்பத்தைத் திருத்தியமைத்துப் புனையா ஓவியமாக (Outline Drawing) எழுதியுள்ளோம் (படம் 5 காண்க)

குறிப்பு: சங்காரம் ஐவகைப்படும்; அவற்றுள் முதலாவது நிவிர்த்தி கலையில் அடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம். இரண்டாவது பிரதிட்டா கலையிலடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம். மூன்றாவது வித்தியா கலையில் அடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம். நான்காவது சாந்தி கலையில் அடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம். இறுதியது சாந்தியதீத கலையில் அடங்கிய தத்துவ புவனங்களின் சங்காரம் என்று ஐந்துவகை சங்காரங்களைச் சிவஞான மாபாடியம் கூறுகிறது.

தக்கயாகப் பரணி என்னும் நூல் பிரளய கால தாண்டவம் என்னும் தாண்டவத்தைக் கூறுகிறது. இதுவும் சங்கார தாண்டவத்தைச் சேர்ந்ததே யாகும்.

> "வேல் எடுத்திலர் அம்பெடுத்திலர் முயலகன்
> பெருவெரின் மிசைக்
> கால் எடுத்திலர் அகில முஞ்சுடு
> கையெடுத்திலர் ஐயரே." *

"வேல் என்பது சூலம், வெரின் = முதுகு. முயலகன் முதுகில் காலெடுத்தல், பிரளயகால தாண்டவமாடல்" என்பது பழைய குறிப்புரை. இதனால் சங்கார தாண்டவம் பலவகைப்படும் எனத் தெரிகிறது.

*காளிக்குக் கூளி கூறியது. 81

நான்காவது

மறைத்தல் செயலாகிய

# திரிபுர தாண்டவம்

## (கொடுகொட்டியும் பாண்டரங்கமும்)

முப்புரம் எரித்த தாண்டவத்தைத் திரிபுர தாண்டவம் என்பர். முப்புரம் அல்லது திரிபுரம் என்பது உயிர்களைப் பற்றிக் கிடக்கும் மும்மலங்களாம். என்னை ?

"அப்பணி செஞ்சடை ஆதிபுராதனன்
முப்புரம் செற்றனன் என்பர்கள் மூடர்கள்
முப்புரமாவன மும்மல காரியம்
அப்புரம் எய்தமை யார் அறிவாரே"

என்பது திருமந்திரம்.

உயிர்களிடத்துப் படிந்து அவற்றின் தூய்மையை மறைத்து நிற்கும் ஆணவம், கன்மம், மாயை என்னும் மூன்று மலங்களும், அரண் அமைந்த கோட்டைபோல் எளிதில் அழிக்க முடியாத வலிமை பெற்றிருப்பவையாதலின், அவை முப்புரம் என்று கூறப்பட்டன. உயிர்களைப் பற்றிக்கிடக்கும் இம் மூன்று மலங்களும் அழிந்தால் தான் உயிர்கள் வீடுபேறடைய முடியும். உயிர்களுக்கு வீடுபேறளிப்பதற் காகவே ஐந்தொழிலைச் செய்கிற இறைவன், இந்தத் தாண்டவத்தைச் செய்து மும்மலமாகிய முப்புரத்தை அழித்து, உயிர்களை விடுவிக்கிறார். முப்புர தாண்டவத்தைக் கொடுகொட்டி என்றும் பாண்டரங்கம் என்றும் இரண்டு விதமாகப் பிரித்துச் சிலப்பதிகாரம் முதலிய பழைய நூல்கள் கூறுகின்றன. கொடுகொட்டி என்பது, திரிபுரம் தீப்பிடித்து எரியும்போது இறைவன்,

இறைவி காண ஆடியது. பாண்டரங்கம் என்பது, திரிபுரம் எரிந்து சாம்பரான பின்னர் இறைவன், நான்முகன் காண ஆடியது. இவற்றை முறையே ஆராய்வாம்.

## கொடு கொட்டி

கொடு கொட்டிக்குக் கொட்டிச் சேதம் என்னும் பெயரும் உண்டு.

**" பாரதி ஆடிய பாரதி அரங்கத்துத்**
**திரிபுரம் எரியத் தேவர் வேண்ட**
**எரிமுகப் பேரம்பு ஏவல் கேட்ப**
**உமையவள் ஒருதிறன் ஆக ஓங்கிய**
**இமையவன் ஆடிய கொடு கொட்டி ஆடல்"**

என்று சிலப்பதிகாரம்* கூறுகிறது.

இதற்கு அடியார்க்கு நல்லார் கூறும் உரை வருமாறு :—" பாரதி = பைரவி. பாரதி அரங்கம் = சுடுகாடு. தேவர் புரமெரிய வேண்டுதலால் வடவை எரியைத் தலையிலேயுடைய பெரிய அம்பு ஏவல் கேட்ட அளவிலே அப்புரத்தில் அவுணர் வெந்து விழுந்த வெண்பலிக் குவையாகிய பாரதியரங்கத்திலே உமையவள் ஒரு கூற்றினளாய் நின்று பாணி தூக்கு சீர் என்னும் தாளங்களைச் செலுத்த தேவர்யாரினு முயர்ந்த இறைவன் சயாநந்தத்தாற் கை கொட்டி நின்று ஆடிய கொடு கொட்டி என்னும் ஆடல்.

திரிபுரம் தீ மடுத்தெரியக்கண்டு இரங்காது கை கொட்டி ஆடுதலிற் கொடுமை யுடைத்தாதல் நோக்கி கொடு கொடி என்று பெயர் கூறினார்."

திரிபுர தாண்டவத்தை இறைவன் ஆடியருளிய போது, இறைவி அருகில் நின்று தமது கைகளால் தாளம் கொட்டினார் என்றும், பாணி தூக்கு சீர் என்னும் தாளப் பகுதி மூன்றில் சீர் என்றும் பகுதி இத்தாண்டவத்தில்

*கடலாடு காதை- 39—47.

சிறப்புப் பெறும் என்றும் கலித்தொகைச் செய்யுள் கூறு கிறது. அப்பாடல்இது :

"படுபறை பலவியம்பப் பல்லுருவம் பெயர்த்து நீ
கொடு கொட்டி ஆடுங்கால் கோடுயர் அகலல்குல்
கொடிபுரை நுசுப்பினாள் கொண்ட சீர் தருவாளோ."

"நின் கையில் ஒலிக்கின்ற பறை பல வாச்சியங்களை யும் ஒலியா நிற்கக், கட்புலனாய்ப் பலவடிவுகளையும் ஈண்டு நின்னிடத்தே ஒடுக்கிக் கொண்டு, கொடிதாகிய கொட்டி என்னும் கூத்தை நீ ஆடுகின்ற காலத்துப் பக்கம் உயர்ந்த அகன்ற குறியினையுடைய கொடியை ஒத்த இடையினை யுடையளோ, தாளம் முடிந்து விடுங் காலத்தினைத் தன்னி டத்தே கொண்ட சீரைத் தருவாள்? ஆண்டுப் பிறர் இல்லையே?" (நச்சினார்க்கினியர் உரை.)

நச்சினார்க்கினியர், இக்கொடு கொட்டி ஆடலை விளக் கும் ஒரு செய்யுளைத் தாம் எழுதிய கலித்தொகை உரை யில் மேற்கோள் காட்டுகிறார். அது வருமாறு :

"கொட்டி யாடற் றோற்றம் ஒட்டிய
உமையவள் ஒருபா லாக ஒருபால்
இமையா நாட்டத் திறைவன் ஆகி
அமையா உட்குட வியப்பும் விழைவும்
பொலிவும் பொருந்த நோக்கிய நோக்கு
அவுணர் இன்னுயிர் இழப்ப அக்களம்
பொலிய ஆடினன் என்ப மற்றதன்
விருத்தம் காத்தற் பொருளொடு கூடிப்
பொருந்த வரூஉம் பொருந்திய பாடல்
திருத்தகு மரபில் தெய்வத் துதிப்பே."

கங்கைக் கரையிலே வட நாட்டு வேந்தருடன் போர் செய்து வெற்றி பெற்றுத் திரும்பி வந்த சேரன் செங்குட் டுவன், தனது வஞ்சிமா நகரத்திலே ஆடகமாடம் என்னும் அரண்மனையின் நிலா முற்றத்திலே, மாலை நேரத்திலே

தனது தேவியாருடன் வீற்றிருந்தான். அவ்வமயம், பறையூர்க் கூத்தச் சாக்கையன் என்னும் பேர்போன நாடகக்கலையாசிரியன், தன் மனைவியுடன் வந்து அரசனை வணங்கி, இருவரும் சிவபெருமான், உமையவள் போன்ற வேடம் புனைந்து இந்தக் கொடுகொட்டி தாண்டவத்தை ஆடிக் காட்டினார்கள். செங்குட்டுவன் தேவியுடன் கண்டு மகிழ்ந்தான் என்று சிலப்பதிகாரம் கூறுகிறது:

"திருநிலைச் சேவடிச் சிலம்பு வாய் புலம்பவும்
பரிதரு செங்கையிற் படுபறை ஆர்ப்பவும்
செங்கண் ஆயிரம் திருக்குறிப்பு அருளவும்
செஞ்சடை சென்று திசைமுகம் அலம்பவும்
பாடகம் பதையாது சூடகம் துளங்காது
மேகலை ஒலியாது மென்முலை அசையாது
வார் குழை ஆடாது மணிக்குழல் அவிழாது
உமையவள் ஒரு திறனாக ஓங்கிய
இமையவன் ஆடிய கொட்டிச் சேதம்
பார்தரு நால்வகை மறையோர் பறையூர்க்
கூத்தச் சாக்கையன் ஆடலின் மகிழ்ந்து"

என்பது அச்செய்யுட் பகுதி.[1]

கொடுகொட்டி பாடல் நான்கு உறுப்புகளையுடையதென்று சிலப்பதிகார உரையில் மேற்கோள் காட்டுகிறார் அடியார்க்கு நல்லார்:

"கொட்டி கொடு விடையோன் ஆடிற்று; அதற்குறுப்பு
ஒட்டிய நான்காம் எனல்"

## பாண்டரங்கம்

"தேர்முன் நின்ற திசைமுகன் காணப்
பாரதி ஆடிய வியன்பாண்டரங்கமும்"

என்பது சிலப்பதிகாரம்.[2]

---

1 கடுகேற் காதை 67-77.

2 கடலாடு காதை 44-45.

இதற்கு அடியார்க்கு நல்லார் உரை வருமாறு: "வானோராகிய தேரில் நான்மறைக் கடும்பரி பூட்டி நெடும் புறம் மறைத்து வார்துகின் முடித்துக் கூர்முட் பிடித்துத் தேர் முன் நின்ற திசைமுகன் காணும்படி பாரதிவடிவாய இறைவன் வெண்ணீற்றை அணிந்தாடிய பாண்டரங்கக் கூத்தும்."

பாண்டரங்கக் கூத்தை இறைவன் ஆடியபோது இறைவி, அருகில் நின்று தமது கைகளால் தாளம் கொட்டினார் என்றும், பாணி தூக்கு சீர் என்னும் தாளப் பகுதி மூன்றில் தூக்கு என்றும் பகுதி இக்கூத்தில் சிறப் புப்பெறும் என்றும் கலித்தொகை கடவுள் வாழ்த்துச் செய்யுள் கூறுகிறது. அச்செய்யுள் இது:

**"மண்டமர் பலகடந்து மதுகையால் நீறணிந்து**
**பண்டரங்கம் ஆடுங்கால் பணை எழில் அணைமென்றோள்**
**வண்டரற்றும் கூந்தலாள் வளர் தூக்குத் தருவாளோ,"**

"மிக்குச் செல்கின்ற போர்களில் பலவாகிய முப் புரங்களை வென்று, அந்த வலியாலே அவர்கள் வெந்து வீழ்ந்த நீற்றை அணிகையினாலே பாண்டரங்கம் என்னும் பெயர் பெற்ற கூத்தை நீ ஆடுகின்ற காலத்து, மூங்கிலி னது அழகையுடைத்தாகிய அணைபோன்ற மெல்லிய வாகிய தோள்களையுடைய வண்டுகள் ஒலிக்கும் கூந்தலை யுடையாளோ, தாளத்தினிடை நிகழுங் காலத்தினை யுடைய தூக்கைத் தருவாள்? ஆண்டுப் பிறரில்லையே? (நச்சி னார்க்கினியர் உரை.)

பாண்டரங்க ஆடலைப்பற்றிய ஒரு செய்யுளை, நச்சி னார்க்கினியர், கலித்தொகைச் செய்யுளுரையில் மேற்கோள் காட்டுகிறார்:

**" ஏறமர் கடவுள் மூவெயில் எய்வுழிக்**
**கூறு கூருகக் கொடியொடும் படையொடும்**
**வேறுவே றுருவின் விண்மிசை பரந்தனர்**
**அவ்வழி ஒளியொடும் உருவொடும் தோன்றித்**




படம் 6.

முப்புரம் அழித்தல்

**தேர் முன் நின்று திசை நலே பனிப்பச்**
**சுவையும் குறிப்பும் ஒழிவில தோன்றி**
**யவை யவை யவ்வழி யாடினன் ஆட**
**மைந்தரும் மகளிரும் தந்நிலே யழிய**
**மெய்ப்படு சுவையொடு கைப்படை மறப்பக்**
**கடிய காலக் காற்றென வேற்றவன்**
**படிநிலே திரியாப் பாண்டரங் கம்மே."**

பாண்டரங்கக் கூத்து ஆறு உறுப்புகளையுடையது என்று அடியார்க்கு நல்லார் சிலப்பதிகார உரையில் கூறு கிறார். அவர் காட்டுகிற மேற்கோள் செய்யுள் இது :

**"பாண்டரங்கம் முக்கண்ணன் ஆடிற்று ; அதற்குறுப்பு ஆய்ந்த ஆறும் எனல்."**

எல்லோரா என்னும் இடத்தில் உள்ள குகைக்கோயி லில், சிவபெருமான் சிலேவளைத்து அம்பு எய்து முப்பு ரத்தை அழிக்கும் சிற்பம் ஒன்று பலகைச்சிற்பமாக அமைக்கப்பட்டுள்ளது. அதனைப் புனையா ஓவியமாக ஈண்டுக் காட்டியுள்ளோம் (படம் 6 காண்க.) இப்படத் தில் சிவ பெருமான், தேரில் நின்று பெரியதோர் வில்லே வன்மையோடு வளைத்துக் குறிபார்த்து அம்பை விடுகிறார். அவர் நிற்கும் நிலேயும் வில்லே வளைக்கும் மிடுக்கும் அம்பை ஏவும் ஆற்றலும் குறிகாணும் நோக்கும் ஆகிய இவையா வும் முப்புரம் வீழ்ச்சியடைவது திண்ணம் என்னும் உணர்ச்சியை உண்டாக்குகிறது. உணர்ச்சியை மட்டுமல்ல ; வெற்றியை நினைவூட்டும் மகிழ்ச்சியையும் தோற்றுவிக் கிறது. இந்த நிலேயில் திருநாவுக்கரசரின் தேவாரம் நினைவுக்கு வருகிறது :

**" திளைக்கும் திருமார்பில் நீறு கண்டேன், சேனர்**
**மதில் மூன்றும் பொன்ற அன்று**
**வளைத்த விரிசிலேயும் கையிற் கண்டேன், வாய்மூர்**
**அடிகளே நான் கண்ட வாறே "**

உடனே, மாணிக்கவாசகரின் திருவுந்தியார் நினை வுக்கு வருகிறது :



படம் 7.
திரிபுர சங்காரம்

**"வளைந்தது வில்லு விளைந்தது பூசல்
உளைந்தன முப்புரம் உந்தீபற
ஒருங்குடன் வெந்தவா றுந்தீபற."**

இப்பாடல்களை மனத்துட்கொண்டு இப்படத்தைக் காணும்போது, இப்பாடல்களின் கருத்தும் சிற்பத்தின் கருத்தும் நமது மனத்தில் ஒருங்கே காட்சியளித்து இன்பம் பயக்கின்றன. இதனோடு நிற்கவில்லை; திருவுந்தியாரின் அடுத்தபாடல் மனதில் தோன்றுகிறது:

**"ஈரம்பு கண்டிலம் ஏகம்பர் தம்கையில்
ஓரம்பே முப்புரம் உந்தீபற
ஒன்றும் பெரு மிகை உந்தீபற."**

இப்பாடல் மனதில் தோன்றிய உடன், தில்லைச் சிற்றம்பலத்திலே உள்ள ஒரு பலகைச் சிற்பம் நம்கண் முன் காட்சியளிக்கிறது. (படம் 7 காண்க.) இப்படத்தில் சிவபெருமான் தமது இடது கையில் வில்லையும் வலது கையில் ஒரு அம்மையும் ஏந்தி நிற்கிறார். அம்பின் தலையில் தீ சுடர்விட்டு எரிகிறது. "எரிமுகப் பேரம்பு"* என்று சிலப்பதிகாரம் கூறுவது இங்கே நினைவுறத் தக்கது.

இவர் கையில் உள்ளது ஒரே ஒரு அம்புதான்; வேறு அம்பு கிடையாது. உந்தியார் கூறுவது போல, இவர் "ஏகம்பர்" (ஓரே அம்பை யுடையவர்) தான். இந்த ஓர் அம்பைத்தானும் எய்யாமல் வாளா கையில் வைத்திருக்கிறார். வில்லையும் வளைக்காமல் இருக்கிறார். ஆனால், இவர் வாயில் புன்னகை முகிழ்ந்து மலர்கிறது. நகை மலரும் முகத்தைக் காணும்போதுதான் இவர் கையில் உள்ள ஒற்றை அம்புதானும் மிகையானது, வேண்டற்பாலதன்று, என்று தோன்றுகிறது. ஏனென்றால், ஓரே அம்பினால் முப்புரத்தை எய்து அழித்தார் என்னும் கதையிருக்க, முப்புரங்களை நகைத்து எரித்தார் என்னும்

---

* கடலாடு காதை : அடி 41.

மற்றொரு கதையும் இருக்கிறதன்றோ? "இடர் மூன்றும் இழித்தருளும் இளமுறுவல் முகமலரிலங்க" என்னும் சிவ தருமோத்திர வாக்கும், "சிவபெருமான் தமது புன் முறுவலினால் மும்மலங்களை அழிக்கிறார்" என்னும் தத்துவக் கருத்தும் ஈண்டுச் சிந்திக்கத் தக்கன.

ஆயிரத்து இருநூறு ஆண்டுகளுக்கு முன்னே அமைக்கப்பட்ட காஞ்சீபுரத்துக் கயிலாசநாதர் கோயில் சுவர்களிலே யுள்ள பலகைச் சிற்பங்கள், வெயிலாலும் மழையாலும் தாக்குண்டு காலப்போக்கில் சிதைந்து மழுங்கிச்சீர் குலைந்துள்ளன. பிற்காலத்தில் இந்தச் சிற்பங்கள் கலைப்பண்புணராத, கைவன்மை யில்லாத தொழிலாளரால் "செப்பனிடப் பெற்று" இன்னும் அதிகமாகப் பழுதாக்கப்பட்டுள்ளன. இந்த நிலையிலும் இச்சிற்பங்கள் கலைவாணர் உள்ளத்தைக் கவர்கின்றன. இச்சிற்பங்களில் இரண்டு கொடு கொட்டி, பாண்டரங்கம் என்னும் கூத்துக்களைக் குறிக்கின்றன. இச்சிற்பங்கள் பெரிதும் சிதைந்துள்ளமையால் இவை ஈண்டுக் காட்டப்படவில்லை.

குறிப்பு: கொடு கொட்டி பாண்டரங்கம் என்னும் இத்தாண்டவங்கள் மறைத்தல் செயலாகிய திரோபவம் ஆகும். இம்மறைத்தல் செயலைக் காத்தல் செயலுடன் தொகுத்துக் கூறுவதும் உண்டு.

ஐந்தாவது

அருளல் செயலாகிய

## ஊர்த்துவ தாண்டவம்

காளியுடன் ஆடினபடியால் காளிதாண்டவம் * என்றும், மிக வேகமாகச் சுழன்று ஆடுவதாகையால் சண்ட தாண்டவம் என்றும் ஒருகாலைத் தலைவரையில் மேலே தூக்கி ஆடுவதாகையால் ஊர்த்துவ தாண்டவம் என்றும், வீடு பேற்றினைத் தருவதாகிய அனுக்கிரகத்தின் பொருட்டுச் செய்வதாகையால் அருள் நட்டம் அல்லது அனுக்கிரக தாண்டவம் என்றும் இதற்கு வேறு பெயர்கள் உள்ளன. "ஆடினார் பெருங்கூத்து காளி காண," என்று அப்பர் கூறியபடியால், இதற்குப் பெருங்கூத்து என்னும் பெயரும் உண்டுபோலும். "செயற்கரிய திருநடம்" என்று அப்பரே கூறுகிறபடியால், இத்தாண்டவம் செய்வது கடினமானது என்று தெரிகிறது.

தொண்டை நாட்டுத் திருவாலங்காட்டிலே இந்தத் தாண்டவத்தைச் சிவபெருமான் செய்ததாகப் புராணங்கள் கூறுகின்றன.

காளி, நடன கலையில் பேர் போனவர். தம் பெயரால் காளீயம் என்னும் நடன நூலை இயற்றியதாகவும் கூறுவர். நடனத்தில் தமக்கு நிகர் ஒருவரும் இலர் என்று காளி

---

* இந்தக்காளி தாண்டவத்தைக் காளிகா தண்டவம் என்று கருதி மயங்கக்கூடாது. காளிதாண்டவம் 5-ஆவது செயலாகிய அருளல் செயலைக் குறிப்பது. காளிகா தாண்டவம் முதலாவது செயலாகிய ஆக்கல் செயலைக் குறிப்பது. இதுவேறு, அதுவேறு.

இறுமாந்திருக்க, அதனையறிந்த சிவபெருமான் அவருடன் நடனப்போர் செய்து இந்த ஊர்த்துவ தாண்டவத்தை ஆடினார் என்றும், காளி இத்தாண்டவத்தைச் செய்யமுடியாமல் தோல்வியுற்று இறுமாப்பு நீங்கினார் என்றும் புராணக்கதை கூறுகிறது.

ஊர்த்துவ தாண்டவம் நிகழ்ந்தபோது கார்க்கோடகன் என்னும் பாம்பரசனும், சுனந்தர் என்னும் முஞ்சிகேசி முனிவரும் இத்தாண்டவத்தைக் கண்டு பேறு பெற்றனர் என்னும் புராணக் கதையும் உண்டு.

இத்தாண்டவத்தில், சிவபெருமான் தமது ஒரு காலைத் தலைவரையில் உயரத் தூக்கி நின்று மிகவேகமாகச் சுழன்று ஆடுகிறார்.

"மண்டில நின்றங் குளால மிட்டு
மட்டித்து வீசி எடுத்த பாதம்
அண்டமுற நிமிர்ந்தாடும் எங்கள்
அப்பனிடம் திருவாலங்காடே"

என்பது அம்மையார் மூத்த திருப்பதிகம்.

"'ஆலவனம் அனைத்தினுக்கும் முதலான
நடனத்தானம் அருள்நட்டம்
மூலமதாம் அதனகத்துச் சண்டதாண்டவம்
ககன முகடு நோக்கி
மேலதாக இடத்தாளை யெடுத்து வலத்தா
ளூன்றி விளக்கும் நட்டம்.'"

என்பது திருவாலங்காட்டுப் புராணம்.*

இந்தத் தாண்ட உருவத்தில் சிவனுக்கு நான்கு, எட்டு, பதினாறு கைகள் அமைப்பதும் உண்டு. ஆனால், நான்கு கைகளைத்தான் அமைப்பது வழக்கம். காலின் கீழ் முயலகன் உருவம் இருப்பதும் உண்டு; சில சிற்பங்களில்

* சுனந்தர் உபதேசச் சருக்கம் 36.

முயலகன் இருப்பது இல்லை. வலக்கை இரண்டில் துடியும் அபய முத்திரையும் காணப்படும். இடது கைகள் இரண்டில், ஒரு கையில் தீச்சுடரும், மற்றொரு கையைத் தலைக்குமேல் உயரத் தூக்கி அகங்கையைக் கவிழ்த்துத் தூக்கிய திருவடிக்குமேல் அமைத்தும் காணப்படும்.

இடது காலை ஊன்றி நின்று வலது காலைத் தூக்கி ஆடுவதுபோல இவ்வுருவம் அமைக்கப்படுவது வழக்கம். இவ்வழக்கத்திற்கு மாறாக இடது காலைத் தூக்கி வலது காலை ஊன்றி ஆடியதாகத் திருவாலங்காட்டுப் புராணம் கூறுகிறது*.

எந்தக் காலை உயர்த்தினாலும் எந்தக் காலை ஊன்றினாலும் மூலக் கருத்துக்கு மாறுபாடு இல்லை. ஏனென்றால், தூக்கிய திருவடியில் அருளல் செயலும் ஊன்றிய திருவடியில்மறைத்தல் செயலும் நிகழ்கின்றன என்பது சாத்திரக் கருத்து. ஆனால், சாத்திரம் இந்தக் காலைத்தான் தூக்க வேண்டும் இந்தக் காலைத்தான் ஊன்றவேண்டும் என்று கூறவில்லை. ஆகவே, எந்தக்கால் உயர்த்தப்பட்டதோ அந்தக் காலில் அநுக்கிரகச்செயலும் எந்தக்கால் ஊன்றப்பட்டதோ அந்தக்காலில் திரோபவச் செயலும் நிகழ்வதாகக் கொள்ளவேண்டும். ஆனந்த தாண்டவமாகிய நடராசத் திருவுருவத்திலும் திருவடியை மாற்றியமைத்திருப்பது (கால் மாறி யாடியது) ஈண்டு நினைவு கூறத்தக்கது.

காஞ்சீபுரத்துக் கயிலாச நாதர் கோவிலில் ஊர்த்துவ தாண்டவச் சிற்பம் காணப்படுகிறது. இதில் பத்துக் கைகள் உள்ளன. சிதைந்துள்ள இந்தச்சிற்பத்தை நான்கு கையுள்ள மூர்த்தியாகத் திருத்தி யமைத்து இங்குப் புனையா ஓவியமாகக் காட்டுகின்றோம். (படம் 8 காண்க.)

இந்தத் தாண்டவம் ஐஞ்செயல்களில் ஒன்றான அருளல் என்னும் செயலைக் குறிக்கிறது என்பதை முகலி

* இரத்தினசபாபதி துதி. சுகந்தர் உபதேசச் சருக்கம் 36.

லேயே கூறியுள்ளோம். திருவாலங்காட்டுப் புராணமும் இதனையே கூறுகிறது. ஆதிசேடன், திருமாலை நோக்கி, ஊர்த்துவ தாண்டவத்தின் பயனைக் கூறவேண்டும் என்று கேட்க அவர் கூறுகிறார் :

**"நாற்றிசையும் போற்றிசெயும் ஆலவனப்**
**பெருமையினை நாதன் அல்லால்**
**போற்றி எவர் புகழ்ந்துரைப்பார்! புனிதமதில்**
**புனிதமாய் பொருவற் றோங்கி**
**மேற்றிகழும் புண்ணியத்தின் புண்ணியமாய்**
**வியனாகி, வீறுபாசம்**
**மாற்றி அருள் அளித்து ஈசன் மலரடிக்கீழ்ப்**
**பேரின்ப வாழ்வு சேர்க்கும்.** 1

இந்தத் தாண்டவக் கருத்தைக் கூறவேண்டும் என்று சுநந்த முனிவர் சிவபெருமானைக் கேட்டுக்கொள்ள அப் பெருமான் கூறுகிறார் :

**"மண்டு இருள்குழு அகல அடியவர்கள்**
**மலமாயை முடிந்து நீங்கத்**
**தொண்டர் கணம் கதிமேவச் சோதி நமது**
**உருவெழுந்த சுடர்கண் மூசி**
**அண்டமெலாம் இருள்நீங்க ஆடல் செய்வோம்**
**ஆலவனத்து; உறுதி என்றும்"** 2

இவ்வாறு புராணம் கூறுவதிலிருந்து இந்தத் தாண்டவம் அருளல் செயலைக் குறிக்கிறது என்பதை அறிகிறோம். திருவாலங்காட்டுத் திருக்கோயிலில் நிகழும் இத் தாண்டவத்தை அனுக்கிரக தாண்டவம் என்று கூறப்படுவதும் ஈண்டு நினைவுறத் தக்கது.

ஐப்பசித்திங்கள் முழு நிலா நாளில், ஆகமத்தில்கூறிய முறைப்படி இறைவனைப் பூசித்து வணங்கி, இந்தத் தாண்

1 சேடனுக்கு மால் உபதேசித்த சருக்கம். 17.
2 திருவாலங்காட்டுப் புராணம்: சுநந்தர் உபதேசம்; 37.



படம் 8.

ஊர்த்துவ தாண்டவம்

டவத்தைக்காண்பவருக்கு அறம், பொருள், இன்பம், வீடு என்னும் நான்கு உறுதிப் பொருள்களும் கிடைக்கும் என்று காரணாகமம் கூறுகிறது.

ஐந்தாவது செயலாகிய இது மூன்றாவது செயலாகிய சங்காரத் தொழிலோடு பொருத்திக் கூறப்படுகிறது.

"ஆலவனம் அனைத்தினுக்கும் முதலான நடனத்தானம் அருள்நட்டம்
மூலமதாம் அதனகத்துச் சண்டதாண்டவம் ககனமுகடுநோக்கி
மேலதாக இடத்தாளை எடுத்து வலத்தாள் ஊன்றி விளைக்கும்நட்டம்
சாலுமிது சங்கார தாண்டவமாம் பிறப்பிறப்புத் தவிர்தலாலே."

என்று திருவாலங்காட்டுப் புராணம் கூறுகிறது.* சிவபெருமான் செய்தருளும் ஐந்தொழில்களில், மறைத்தல் செயலை ஆக்கல் செயலுடனும், அருளல் செயலை அழித்தல் செயலுடனும் சேர்த்து மூன்று செயலாகக் கூறுவதும் உண்டு. இதனைச் சிவஞான சுவாமிகள் தமது திராவிட மாபாடியத்திலே நன்கு விளக்குகிறார். இது வருமாறு:

"ஆகமங்களினும் முதல்வனுக்கு இலயம், போகம், அதிகாரமெனவும், ஆரணி, ஜனனி, இரோதயித்திரி எனவும், முத்தொழில்பற்றி மூன்றவத்தையும் மூன்று சத்தியுமே கூறப்பட்டன. ஆகலான், மறைப்பும் அருளும் உடன் கூட்டி ஐந்தொழில் என்பது யாண்டுப் பெற்றாமெனின்,— நன்று சொன்னாய்! மறைப்பாவது, வினை நுகர்ச்சிக்கண் அதன் வழிநின்று நடாத்துவதாகிய முதல்வனது சங்கற்பமேயாகலின், அது திதியின் கண்ணும், வீடுபேறுவது மீட்சியின்றி இலயித்தலேயாகலின், அது சங்காரத்தின் கண்ணும் அடங்குமென்பதுபற்றி, முத்தொழில் எனத் தொகுத்துக் கூறப்படும். விரித்துக்கூறுங்கால் ஐந்தொழில் என்றே எல்லா ஆகமங்கட்கும் துணிபென்க."*

---

*சுகந்தர் உபதேசச் சருக்கம். 36. *சிவஞானபோதம்: திராவிட மாபாடியம் 2-ஆம் சூத்திரம்.

ஐஞ்செயலையும்

ஒருங்கே செய்தருளுகிற

## ஆனந்த தாண்டவம்

"குனித்த புருவமும் கொவ்வைச் செவ்வாயில் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல் மேனியில் பால் வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்த பொற்பாதமும் காணப்பெற்றால்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே."

சிவபெருமான் ஐஞ்செயலையும் தனித்தனியே செய்தருளுகிற தாண்டவ உருவங்களை இதுகாறும் ஆராய்ந்தோம். இனி, ஐஞ்செயலையும் ஒருங்கே செய்தருளுகிற தாண்டவத்தை ஆராய்வோம்.

இந்தத் தாண்டவ மூர்த்தியை ஆனந்த தாண்டவர் என்றும், ஆடவல்ல நாயனார் என்றும் கூறுவதுண்டு. நாதாந்த நடனம் என்பதும் இதுவே. தில்லைப் பொன்னம்பலத்திலே சிவபெருமான், இந்தத் தாண்டவத்தைச் செய்தருளுவதாக நூல்கள் கூறுகின்றன. மார்கழித் திங்கள் திருவாதிரை நன்னாளில் இந்தத் தாண்டவத்தைக் காண்பது மிகச் சிறந்த பேறென்று கருதப்படுகிறது.

பதஞ்சலி, வியாக்கிரபாதர் என்னும் முனிவர்கள் காண்பதற்காக இந்தத் தாண்டவத்தை இறைவன் செய்தருளினார் என்று புராணம் கூறுகிறது.

படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல் என்னும் ஐந்து செயல்களும் இத்தாண்டவத்தில் ஒருங்கே நிகழ்கின்றன.

*"அரன் துடி தோற்றம்; அமைப்பில் திதியாம்;*
*அரன் அங்கிதன்னில் அறையில் சங்காரம்;*
*அரனுற்றணைப்பில் அமரும் திரோதாயி;*
*அரனடி என்றும் அனுக்கிரகம் என்னே"*

என்பது திருமந்திரம்.

"தோற்றம் துடியதனில்; தோயும்திதி அமைப்பில்;
சாற்றிடும் அங்கியிலே சங்காரம்;—ஊற்றமா
ஊன்று மலர்ப்பதத்தில் உற்றதிரோதம்; முத்தி
நான்ற மலர்ப்பதத்தே நாடு."

என்பது உண்மை விளக்கம்.

நடராசத் திருவுருவத்தின் ஐஞ்செயல் தத்துவக்கருத்தை இன்னும் தெளிவாகக் கூறுகிறார் செந்தமிழ்ப் புலமை நிறையப்பெற்ற செந்நாப்புலவர் குமர குருபர சுவாமிகள். அடிகள், தமக்கு இயற்கையா யமைந்துள்ள அழகும் தெளிவும் நிறைந்த நடையில் கூறும் செய்யுள் இது :

"பூமலி கற்பகப் புத்தேள் வைப்பும்
நாமநீர் வரைப்பில் நானில வளாகமும்
ஏனைப் புவனமும் எண்ணிங் குயிரும்
தானே வகுத்ததுன் தமருகக் கரமே.
தனித்தனி வகுத்த சராசரப் பகுதி
அனைத்தையும் காப்பது உன் அமைத்த பொற் கரமே.
தோன்றுபு நின்றவத் தொல்லுல கடங்கலும்
மாற்றுவது ஆரழல் வைத்ததோர் கரமே.
ஈட்டிய வினைப்பயன் எவற்றையும் மறைத்து நின்று
ஊட்டுவ தாகும்நின் ஊன்றிறபதமே.
அடுத்த இன்னுயிர்கட்கு அளவில் பேரின்பம்
கொடுப்பது, முதல்வ! நின் குஞ்சித பதமே." 1

இச்செய்யுள்களின் கருத்து : கூத்தப் பெருமானுடைய துடி ஏந்திய கை ஆக்கல் செயலையும், அபயக்கை காத்தல் செயலையும்*, தீச்சுடர் ஏந்திய கை அழித்தல்

---

1 சிதம்பர மும்மணிக்கோவை.

*காத்தல் செயலைக்குறிக்கிற அபயக் கரத்தைப்பற்றி நாவுக்கரசர் நகைச்சுவைபடக் கூறியிருப்பது குறிப்பிடத்தக்கது. சுவாமிகள் தில்லைக்குச் சென்று நடராசப் பெருமானைக் கண்டு வணங்கிய போது, அப்பெருமானுடைய அபயக் கரம் அப்பரை நோக்கி, "என்று வந்தாய்?" என்று கேட்பதுபோலிருந்ததாம்! இதனை,

"சென்று தொழுமின்கள் தில்லையுட் சிற்றம்பலத்துநட்டம்
என்று வந்தாய் எனும் எம்பெருமான்றன் திருக்குறிப்பே."

என்னும் கோயில் திருவிருத்தத்தில் அப்பர் கூறியுள்ளது காண்க.

செயலையும், ஊன்றிய திருவடி மறைத்தல் செயலையும், தூக்கிய திருவடி அருளல் செயலையும் குறிக்கின்றன என்பது.

காலடியில் மிதிக்கப்பட்டிருக்கும் முயலகன் உருவம் ஆன்மாக்களின் இருவினைகளைக் குறிக்கிறது.

நடராசத் திருவுருவம் கோயிற்புராணத்தில் இவ்வாறு கூறப்படுகிறது. பாதாதி கேசமாகப் பாதத்திலிருந்து விவரிக்கப்படுகிறது :

**"திருவடி நிலையும், வீசும் செய்யகாலும், சிலம்பும்**
**உருவளர் ஒளியும், வாய்ந்த உருவும், உடுத்த தோலும்,**
**அரைதரு புரிவும், கச்சின் அணிகளும், அழகார் உந்தி**
**மருவிய உதரபந்தக் கோப்பும், நூல் வாய்ப்பு மார்பும்."**

(குறிப்பு : திருவடிநிலை=நிலைத்த திருவடி: ஊன்றிய பாதம். வீசும் செய்யகால்=தூக்கிய திருவடி: குஞ்சித பாதம். ஊரு=தொடை. உந்தி=கொப்பூழ்.)

"வீசிய செய்ய கையும், விடதரக் கரங் குவித்த
தேசும், வன் துடியும், அங்கிச் செறிவும், முன் திரண்டதோளும்,
காசைகொள் மிடறும், தோடார் காதும், வெண்குழையும் காண
மாசிலா மணிவாய்விட்டு வயங்கிடா நகை மயக்கும்"

(குறிப்பு : வீசிய செய்ய கை=தூக்கிய பாதத்தைக் காட்டுகிற இடது கை; கஜஹஸ்தம். விடதரக் கரம் குவித்த தேசு=பாம்பை அணிந்த கையைக் கவித்தருளிய அழகு; அபயகரம். துடி=உடுக்கை. அங்கிச் செறிவு= தீயுடைய அகல். காசை கொள்மிடறு=நீலகண்டம்.)

ஓங்கிய கமலச் செவ்வி ஒளிமுக மலரும், கண்கள்
பூங்குழல் உமையை நோக்கும் புரணமும், புருவப் பொற்பும்,
பாங்கமர் நுதலும், பின்தாழ் சடைப் பரப்பும், பாம்பும்
நீங்கரும் தாரும், நீரும், நிலவும், மேல் நிலவு நீறும்.*

(குறிப்பு: முகமலர்=மலர்ந்த முகம். உமையை நோக்கும் புரணம்=உமையம்மையைப் பார்க்கும் அசைவு. புருவப் பொற்பு=புருவ அழகு. தார்=கொன்றை மாலை நீர்=கங்கை, நிலவு=நிலாப்பிறை. நீறு=திரு வெண்ணீறு)

---

* கோயிற் புராணம்: நடராசச் சருக்கம். 11, 12, 13.

ஆநந்த தாண்டவப் பெருமானுடைய திருவுருவம் இவ்வாறு, நூல்களில் சொல் ஓவியமாகக் கூறியிருப்பதைக் கலைவல்ல சிற்பிகள் அழகமைந்த சிற்ப உருவமாகச் செய்து கொடுத்திருக்கிறார்கள். ஏனைய தாண்டவ உருவங்களைப் போலவே இந்த ஆநந்த தாண்டவ உருவமும் செம்மை பெற அமைந்து கண்ணுக்கு அழகையும் கருத்துக்கு இன்பத்தையும் தருகிறது.

சிற்பப் படவிளக்கம்:—சடைமுடியில் கங்கை, நிலாப் பிறை, கொக்கிறகு, தலைமாலை, பாம்பு இவைகளை அணிந்திருக்கிறார். தாண்டவம் செய்யும் வேகத்தினாலே, சடைமுடி அவிழ்ந்து சடைப்புரிகள் இருபுறமும் காற்றில் அலைகின்றன. புரியின் பிரிவுகள் 5, 7, அல்லது 9 ஆக இருக்கும். "ஒன்பது போலவர் கோலக் குழற் சடை" என்றார் அப்பர் சுவாமிகள்.[1] தாண்டவ வேகத்தினாலே சடைப்புரிகள் மட்டும் ஆடுகின்றன என்று நினைக்கவேண்டா; ஏனைய பொருள்களும் ஆடுகின்றன.

ஆதிபரன் ஆட, அங்கைக் கனல் ஆட,
ஓதும் சடை ஆட, உன்மத்த முற்றாட,
பாதிமதி ஆடப், பாரண்ட மீதாட,
நாதமோ டாடினன் நாதாந்த நாட்டமே.[2]

நெற்றிக் கண்ணும், புன்முறுவல் பூத்த இதழும், மலர்ந்த முகமும் மனத்தைக் கவர்கின்றன. இடது காதில் பத்திர குண்டலமும் வலது காதில் மகரகுண்டலமும் இருக்கின்றன. அல்லது சங்கக் குழையும் பாம்பு குண்டலமும் இருக்கும்.

நான்கு கைகள். வலது கைகளில் துடியும் அபய முத்திரையும் உள்ளன. அபயகரத்தின் முன்கையில் பாம்பு ஒன்று சுற்றிக்கொண்டு படமெடுத் தாடுகிறது. இடது கைகள் ஒன்றில் தீச்சுடர் இருக்கிறது. மற்றொரு கை வீசிய கரமாக நீட்டி, தூக்கிய திருவடியை அழகுறக் காட்டுகிறது.

---

1 விடந்தீர்த்த பதிகம். 2 திருமந்திரம்

அரைக்கு மேலே வயிற்றைச் சுற்றிக் கட்டப்பட்டுள்ள உதரபந்தனம் என்னும் ஆடையின் முன்றானை, தாண்டவம் செய்யும் வேகத்தினாலே இடது புறமாகக் காற்றில் பறக்கிறது. கழுத்து, கால்கள், கைகள் முதலியவற்றில் அணிகலன்களை அணிந்திருக்கிறார். இடதுகாலைக் குஞ்சித பாதமாகத் தூக்கி நின்றாடுகிறார். வலது கால், முயலகன் முதுகில் ஊன்றி அவன் எழுந்திரா வண்ணம் அழுத்துகின்றது. திருவடியின் கீழே முயலகன் குப்புறக் கிடக்கிறான். அவன் தலை, கூத்தப் பிரானுக்கு வலது புறமாகவும் கால்கள், அவருக்கு இடது புறமாகவும் இருக்கின்றன. அவன் முகம் வருத்தத்தினால் விகாரமாகக் காணப்படுகிறது. ஒரு கையில் பாம்பைப் பிடித்திருக்கிறான். மற்றொரு கையைப் பாம்பு படமெடுப்பது போன்று கவிழ்த்துக் காட்டுகிறான். இவனது உருவம் குறளாகவும் விகாரமாகவும் இருக்கிறது. "தருக்கழிய முயலகன் மேல் தாள்வைத்தானை" என்றும், "அடங்காத முயலகனை அடிக்கீழ்க் கொண்டார்" என்றும் திருநாவுக்கரசர் கூறியிருப்பது ஈண்டு நினைவு கூறத்தக்கது. அன்றியும்,

> "....................தூமப்
> படமெடுத்த வாளரவம் பார்த்தடரப் பற்றி
> விடமெடுத்த வேகத்தான் மிக்குச்---சடலம்
> முடங்க வலிக்கும் முயலகன்தன் மொய்ம்பை
> அடங்க மிதித்த அடி போற்றி"

என்று பதினோராந்திருமுறைச் செய்யுள் * கூறுவதும் கருதத்தக்கது.

இத்தாண்டவ உருவத்தின் கீழேயுள்ள பீடம், தாமரை மலர் போன்று அமைந்திருக்கிறது. கூத்தப் பெருமானைச் சூழ்ந்து திருவாசி அழகுபடக் காணப்படுகிறது. திருவாசியில், இடையிடையே தீச்சுடர்கள் அழல் விட்டெரிகின்றன. இவை அழல் வட்டம்போலக் காட்சி

1 நக்கீர தேவர் அருளிய போற்றிக்கலி வெண்பா.

யளிக்க இவ்வழல் வட்டத்தினுள்ளே, ஒளியில் பேரொளி யாய் விளங்கும் கூத்தப் பெருமான் ஐந்தொழில் தாண்ட வமாகிய ஆநந்த தாண்டவத்தைச் செய்தருளுகின்றார்.

இவ்வாறு அமைந்துள்ள நடராசத் திருவுருவம் தமிழ் நாட்டிலே ஒவ்வொரு சிவன் கோயிலிலும் உண்டு என்று முன்னரே கூறியுள்ளோம். இவற்றுள் மிக்க அழகும் கலைப்பண்பும் அமையப் பெற்றிருப்பது, சென்னை அர சாங்கத்துக் காட்சி சாலையில் இருக்கிற திருவுருவந்தான். (படம் 9 காண்க.) இது சென்னைக்கு வடக்கேயுள்ள திரு வாலங்காடு என்னும் ஊரில், நிலத்திலிருந்து அகழ்ந் தெடுக்கப் பட்டது. இச்சிற்பத்தில் திருவாசி, உதர பந்தனம், விரிந்தாடும் சடைப்புரிகள் முதலியன உடைந்து விட்டன. ஆயினும் சிற்பத்தின் அழகு குறையவில்லை. இந்த அழகிய சிற்ப உருவத்தின் அமைப்பைக் கண்ணு றும் மேல்நாட்டுக் கீழ்நாட்டுக் கலைவாணர்கள் அனைவரும் புகழ்ந்து பேசுகிறார்கள். உண்மையாகவே, கலையழகு நிரம் பியது இந்தச் சிற்பம். இதில் ஐயமில்லை. இச்சிற்ப உருவத் தின் சிறப்புகளை எழுதுவதைவிட கண்டு களிப்பதே சிறப் புடைத்து. கலைவாணர்கள் கண்டு மகிழ்வார்களாக.

குறிப்பு: நடராச உருவத்தை இன்னொரு விதமாவும் அமைப்பது உண்டு. அதாவது, ஊன்றிய வலது திருவடி யைத் தூக்கிக் குச்சிதபாதமாகவும், குஞ்சிதபாதமாக இருக்க வேண்டிய இடது திருவடியை முயலகன் முதுகில் வைத்து ஊன்றிய பாதமாகவும் கால் மாற்றி அமைப்பதும் உண்டு. கால் மாறியிருப்பது தவிர வேறு மாறுதல் இல்லை. கால் மாறியாடிய கதையைத் திருவிளையாடற் புராணத் தில் காண்க.

திருவாரூருக்குக் கிழக்கே எழு கல் தொலைவில் உள்ள கீழ்வேளூரிலும், சிவபெருமான் அகத்தியருக்குக் காட்சி யளித்த போது வலது காலைத் தூக்கி யாடி யருளியதாகக் கூறப்படுகிறது.



படம் 9

ஆநந்த தாண்டவம்

# முடிவுரை

சிவபெருமானுடைய தாண்டவ உருவம் பதினாறு வகை என்று சிற்பாசாரியர்கள் கூறுவர். அப்பதினாறு தாண்டவ உருவங்களில், ஐஞ்செயலுடன் தொடர்புடைய சில தாண்டவங்களை மட்டும் இதுகாறும் ஆராய்ந்தோம். பஞ்ச கிருத்தியங்களுக்குரிய தாண்டவ உருவங்களைக் காட்டினோமாயினும், அவற்றில் வேறு சிலமாதிரி உருவங்களைக் காட்டினோமில்லை. சந்தியா தாண்டவத்தில், பாம்பை அரையில் சுற்றிய தாண்டவ உருவத்தை மட்டும் காட்டினோமாயினும், பாம்பைத் தலைக்கு மேல் தூக்கிப் பிடித்தாடுகிற சிற்ப உருவத்தைக் காட்டவில்லை. புதுக் கோட்டையில், திருவரங்குளம் என்னுமிடத்தில் உள்ள மற்றொரு விதமான சந்தியா தாண்டவத்தின் அழகிய சிற்ப உருவத்தையும் வாசகர்களுக்குக் காட்டவில்லை. திரிபுராந்தக மூர்த்தியின், சிரித்த முகமுடைய மற்றொரு செப்புச் சிலை உருவத்தையும் அறிமுகப் படுத்தவில்லை. காஞ்சி கயிலாச நாதர் கோவிலில் உள்ள, சிதைந்து அழிந்துள்ள, பலகைச் சிற்பங்களாயமைந்த கொடு கொட்டி, பாண்டரங்கம் என்னும் தாண்டவ உருவங்களையும் காட்டினோமில்லை.

ஆனந்த தாண்டவப் பெருமானுடைய கால் மாறியாடிய சிற்பத்தையும், இராமேசுவரத்தில் சில வேறுபாடுகளுடன் உள்ள நடராச மூர்த்தியின் உருவத்தையும், ஊன்றியபாதத்தின் கீழே, முயலகனுக்குப் பதிலாக நாகப் பாம்பு உள்ள நடராச மூர்த்தியின் உருவத்தையும், திருநெல்வேலி முதலிய இடங்களில் உள்ள நடராச மூர்த்திகளின் திருவுருவங்களையும் வாசகர்களுக்கு அறிமுகப் படுத்தவில்லை.

இவற்றை எல்லாம் வாசகர்களுக்கு அறிமுப் படுத்தாத காரணம், அச்சுக் காகிதக் கட்டுப் பாடும் பொருள் முட்டுப் பாடும் ஆகும். மேற் குறிப்பிட்ட, விடுபட்ட சிற்ப உருவங்களை யெல்லாம் இந்நூலில் அமைத்துக்

காட்டி அதிக விலை வைத்தால், இன்றைய நிலையில், மக்கள் விலை கொடுத்து வாங்குவார்களா என்கிற ஐயமே, இவற்றை யெல்லாம் வாசகர்களுக்கு அறிமுகப் படுத்த முடியாமற் போயிற்று. ஆயினும், இன்றியமையாமல் காட்ட வேண்டிய சிற்ப உருவங்களை எல்லாம் குறைவின்றிக் காட்டியுள்ளோம். கலைச் செல்வர்களின் பொருளுதவி கிடைக்குமாயின் இரண்டாம் பதிப்பில் இவை வெளியிடப்படும்.

நமது நாட்டில், அழகுக் கலைகளில் ஆர்வம், மக்களிடையே இன்னும் மலர்ச்சி யடையவில்லை. பண்டைக்காலத்தில், தமிழகத்திலே சீருஞ்சிறப்பும் பெற்று உயரிய நிலையில் இருந்த அழகுக்கலைகள், பல காரணங்களினால் இடைக் காலத்தில் மறக்கப் பட்டும் மறைக்கப் பட்டும் மங்கி விட்டன. இவ்வழகுக் கலைகளின் சிறப்புகளை ஆராய்ந்து கலையின்பத்தை நுகர வேண்டும் என்னும் எண்ணம், மக்களிடையே இன்னும் மலரவில்லை. கலை, கலை என்று இப்போது பேசப்படுவது இலக்கியக் கலை, இசைக் கலை, நாடகக் கலைகளை மட்டுமே. இவைகளைவிட வேறு அழகுக் கலைகள் இருப்பதை மக்கள் இன்னும் உணரவில்லை. சிற்பம், ஓவியம் போன்ற வேறு அழகுக் கலைகள், நமது நாட்டைப் பொறுத்த வரையில், இன்னும் இருட்டறையில் உள்ளன. இவைகளை வெளியில் கொண்டு வந்து இவைகளின் கலை அழகையும், அழகின்பத்தையும் மக்களுக்குக் காட்டுவோமானால், மக்கள் ஆர்வத்துடன் ஏற்றுக் கொள்வர். அழகுக் கலையில் மறுமலர்ச்சியும் ஏற்படும்.

இந்நூலில், ஆராய்ச்சிக்காக எடுத்துக் கொள்ளப் பட்டது சிற்பக் கலையின் ஒரு சிறு பகுதியைத்தான். அதாவது தாண்டவ சிற்ப உருவங்களை மட்டுமே. சிற்பக் கலை உருவங்கள் இன்னும் ஏராளமாக உள்ளன. இக்கலைச் செல்வத்திற்குக் குறைவே இல்லை. நிறைய உள்ளன. இக் கலையாராய்ச்சியில், மக்களுக்கு உணர்ச்சியும் ஆர்வமும் ஏற்படுமானால் அவைகளை எல்லாம் நூல் வடிவமாக வெளியிடுவோம். தமிழகத்தில் அழகுக் கலைகள் ஓங்குவதாக!

# தொடர்புரை

## சாக்கைக் கூத்தரும் சாக்கைக் காணியும்

சிவபெருமான் ஆடியருளும் தாண்டவங்களை, பயிற்சி பெற்ற சாக்கையர் என்பவர் ஆடிவந்தனர் என்றும் அவர்களுக்குச் சில கோயில்களிலே சாக்கைகாணி அல்லது கூத்தக்காணி என்னும் பெயருடன் நிலங்கள் நன்கொடையாகக் (மானியமாக) கொடுக்கப்பட்டன என்றும் சாசனங்களினால் அறிகிறோம்.

நட்டுவநிலை, நட்டுவக் காணி, வீணைக்காணி, நிருத்திய பொகம், தலைக்கோல் காணி, கூத்தக் காணி முதலிய மானியங்களை நாம் இங்குக் குறிப்பிட வில்லை. இவை சாந்திக் கூத்து, நடனம், இசைப் பாட்டு முதலியவற்றுக்காகக் கொடுக்கப் பட்ட மானியங்கள். நாம் இங்குக் குறிப்பிடுவது தாண்டவக் கூத்தை யாடும் சாக்கையரைப் பற்றியே.

சங்க காலத்திலே, அதாவது. கி. பி. 300க்கு முன்னே, பொது மேடைகளில் திருவிழாக் காலங்களில் ஆடப் பெற்ற பதினொரு ஆடல்களில், சிவபெருமான் ஆடிய தாண்டவங்களில் கொடுகொட்டி, பாண்டரங்கம், கபாலம் என்னும் மூன்று ஆடல்கள் ஆடப் பெற்றன என்று சிலப்பதிகாரம், மணிமேகலை முதலிய நூல்களினால் அறிகிறோம். பறையூர் கூத்தச்சாக்கையன், கொடுகொட்டி யாடலைச் சேரன் செங்குட்டுவன் முன்னர் ஆடினான் என்னும் செய்தியைச் சிலப்பதிகாரம் கூறுகிறது:

பிற்காலத்திலும் சாக்கையர் இருந்தனர் என்பதும் அவர்களைத் தமிழ் மன்னர் போற்றிவந்தனர் என்பதும் சாசனங்களால் அறியப் படுகிறது. திருவிடை மருதூரில் (தஞ்சை ஜில்லா கும்பகோணம் தாலுக்கா) உள்ள மகாலிங்க சுவாமி கோயிலில் உள்ள சாசனம் ஒன்று, திருவெள்ளறை சாக்கைஎன்னும் ஆடலாசிரியருக்கு நிலம் மானியம்

வழங்கப்பட்ட செய்தி கூறுகிறது. "தைபூசத் திருநாளிலே கூத்தாடுவதாகவும். நிருத்தம் ஆடின பிற்றைநாள் துடங்கி மூன்று கூத்தாடுவதாகவும். ஆக இக் கூத்து ஏழு அங்கமும் ஆடுவதாகவும்.'' என்று இந்தச் சாசனம் கூறுகிறது. இந்தச் சாசனம் ஏற்பட்டது, பாண்டியன் தலைக்கொண்ட கோப் பரகேசரிவர்மன் என்னும் சோழ அரசனுடைய ஆட்சியில் 4-ஆவது ஆண்டில் ஆகும். 154 of 1895. (S. I. I. Vol 5 No 718.)

காமரசவல்லியில் (திருச்சி ஜில்லா, உடையார்பாளையம் தாலுக்கா) உள்ள கார்க்கோடேசுவரர் கோவில் சாசனம், சாக்கை மாராயன் விக்கிரம சோழதேவன் என்னும் ஆடலாசிரியரைப் பற்றிக் கூறுகிறது. இவர் இக் கோயிலில், திருவாதிரையில் மூன்று சாக்கைக்கூத்தும் வைகாசித் திருவாதிரையில் மூன்று சாக்கை கூத்தும் ஆடுவதற்காக நியமிக்கப் பட்டிருந்தார். இந்தச் சாசனம், பரகேசரி வர்மன் என்னும் உடையார் இராஜேந்திர சோழருடைய 29-ஆவது ஆண்டில் ஏற்பட்டது (65 of 1914)

மற்றும், விக்கிரமாதித்தன் திருமுதுகுன்றன் என்னும் விருதராஜ பயங்கர ஆசாரியன் (90 of 1931.), குமரன் சீகண்டன் (120 of 1925,), பாரசிவன் பொன்னன் என்னும் கலாவிநோதப் பேரரையன் (255 of 1925.) முதலிய ஆடலாசிரியர்களின் பெயர்கள் சாசனங்களில் கூறப் படுகின்றன. இவர்கள், நமது ஆராய்ச்சிக் குரிய சாக்கைக் கூத்தர்களோ, வேறுவகைக் கூத்தர்களோ என்பது விளங்க வில்லை.



"குறியொன்று மில்லாத கூத்தன்தன் கூத்தை எனக்
கறியும் வண்ணம் அருளியவா ருர்பெறுவா ரச்சோவே"

# இப்புத்தகத்தை எழுதத் துணையாக இருந்த நூல்கள்.

| | | |
|---|---|---|
| 1 | உண்மை விளக்கம் | மனவாசகம் கடந்தார் |
| 2 | கலித்தொகை | நல்லந்துவனார் |
| 3 | ஷை உரை | நச்சினார்க்கினியர் |
| 4 | கல்லாடம் | கல்லாடனார் |
| 5 | ஷை உரை | மயிலேறும் பெருமாள் பிள்ளை |
| 6 | காமிகாகமம் (தமிழுரையுடன்) | மயிலை. அழகப்ப முதலியார் அவர்கள் பதிப்பு |
| 7 | கோயிற் புராணம் | உமாபதி சிவாகாசிரியார் |
| 8 | சிதம்பரமும்மணிக்கோவை | குமரகுருபர சுவாமிகள் |
| 9 | சிலப்பதிகாரம் | இளங்கோவடிகள் |
| 10 | ஷை உரை | அடியார்க்கு நல்லார் |
| 11 | சிவப்பிரகாசம் | உமாபதி சிவாசாரியார் |
| 12 | ஷை உரை | மதுரை சிவப்பிரகாசர் |
| 13 | சிவஞான மாபாடியம் | சிவஞான சுவாமிகள் |
| 14 | சூடாமணி நிகண்டு | மண்டல புருடர் |
| 15 | தத்துவப் பிரகாசம் | தத்துவப்பிரகாசர் |
| 16 | ஷை உரை | ஷை |
| 17 | திருக்கூவப் புராணம் | துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள் |
| 18 | திருப்புத்தூர்ப் புராணம் | காரைக்குடி ராம. சொ. சொக்கலிங்கச் செட்டியார் |
| 19 | திருமந்திரம் | திருமூலர் |
| 20 | திருவாசகம் | மாணிக்கவாசகர் |

| | | |
|---|---|---|
| 21 | திருவாலங்காட்டுப் புராணம் | |
| 22 | திருவாலங்காட்டு மூத்த திருப்பதிப்பகம், (பதினோராந் திருமுறை) | காரைக்கால் அம்மையார் |
| 23 | திருவிளையாடற் புராணம் | பரஞ்சோதி முனிவர் |
| 24 | ,, | வேப்பத்தூரார் |
| 25 | திருவொற்றியூர் ஒருபாஒருபது (பதினோராந் திருமுறை) | பட்டினத்துப் பிள்ளையார் |
| 26 | திவாகரம் | சேந்தனார் |
| 27 | தீக்ஷாவிதி (கிராயாக்கிரம ஜோதி வியாக்கியானம் அகோர சிவாசாரியார் உரை. | மயிலை. அழகப்ப முதலியார் அவர்கள் பதிப்பு |
| 28 | தேவாரம் | அப்பர், சம்பந்தர், சுந்தரர் |
| 29 | நடராசதத்துவம் | உயர்திரு விபுலாந்த அடிகள் |
| 30 | பஞ்சதிகார விளக்கம் | திருப்போரூர் சிதம்பர சுவாமிகள் |
| 31 | பொன் வண்ணத்தந்தாதி (பதினோராந் திருமுறை) | சேரமான் பெருமாள் நாயனார் |
| 32 | போற்றிக்கலி வெண்பா (பதினோராந் திருமுறை) | நக்கீரதேவர் |
| 33 | பௌஷ்கராகமம் (தமிழ் உரையுடன்) | மயிலை. அழகப்ப முதலியார் அவர்கள் பதிப்பு |
| 34 | South Indian Inscriptions | |
| 35 | Pallava Architecture | A. Rea |
| 36 | South Indian gods and goddesses. | H. Krishna Sastri |
| 37 | Dance of Svia | Ananda Coomaraswamy |

